# திருக்கோயில்கள் வழிகாட்டி

## வேலூர் மாவட்டம்





தமிழ்நாடு அரசு

**இந்து சமய அறநிலையத் துறை**



ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமி, தக்கோலம்

முதற்பதிப்பு : **ஜூலை 2014**

முன்அட்டை : **அருள்மிகு அமிர்தபலவல்லித் தாயார்,**
**அருள்மிகு யோக நரசிம்மசுவாமி, சோளிங்கர்**

பின்அட்டை : **அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில்,**
**இரத்தினகிரி**

அச்சிடுவோர் : **ஓரியண்ட் பிரிண்ட் சர்வீஸ்**
**சென்னை – 5.**

விலை : **160/–**

# அமைதி – வளர்ச்சி – வளமை



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

புரட்சித் தலைவி **அம்மா** அவர்கள்

**பூ. செந்தூர்பாண்டியன்**
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

நாள் 23.5.2014

## வாழ்த்துச் செய்தி

ஒலியின் ஓசையாய், ஓங்காரத் திருவடியாய் எல்லோரும் போற்றும் வெற்றித் திருமகளாய், தமிழர்களின் குலவிளக்காய் விளங்கும் **மாண்புமிகு இதய தெய்வம் அம்மா** அவர்களின் நல்லாசியோடு இந்த வாழ்த்துச் செய்தியை வழங்குகிறேன்.

இலட்சிய வேட்கையுடன், உலகமே வியந்து போற்றும் உன்னத திட்டங்களால், தொலைநோக்கு பார்வையால் தமிழகத்தை முதன்மை மாநிலமாக எல்லாத் துறைகளிலும் வழிநடத்தும் **அம்மா** அவர்களின் மணிமகுடச் செயல்களில் ஒன்றாக இத்திருக்கோயில்கள் வழிகாட்டி புத்தகம் அமைகிறது.

பிறவி எடுத்ததன் பலனை ஒவ்வொரு மனிதனும் அடைய வேண்டும் என்றால் ஆன்மாவைப் பற்றி அறிய வேண்டும். ஆன்மாவைப் பற்றி அறிய ஒரே வழி திருக்கோயில்களுக்கு சென்று வழிபடுவதே. மனித மனம் உயரவும், சமூக வாழ்க்கை சிறக்கவும் அனைவருக்கும் வழிகாட்டியாக திகழ்வது திருக்கோயில்களே.

தமிழகத்தின் பெருமையே திருக்கோயில்களை சார்ந்துதான் அமைகிறது. தமிழகத்தில் வேலூர் மாவட்ட திருக்கோயில் வழிகாட்டி புத்தகம் பக்தர்களுக்கும், பக்திச் சுற்றுலாப் பயணிகளுக்கும் கருத்து பெட்டகமாகவும், கருவூலமாகவும் திகழும் என்பதில் ஐயம் இல்லை.

இவ்வழிகாட்டி புத்தகம் எல்லாவகையிலும் மின்னி மிளிர்கிறது. இதனை நேர்த்தியோடு உருவாக்கிய அனைத்து நெஞ்சங்களுக்கும் வாங்கிப் பயன்பெறும் உள்ளங்களுக்கும், என் அன்பையும், நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களை நெகிழ்வோடு பதிவு செய்கிறேன்.

அன்புடன்

P.

**( பூ. செந்தூர்பாண்டியன் )**

**முனைவர் ரா. கண்ணன்,** இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை – 9.
தொலைபேசி 044–25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்''
திருக்கோவிலில்லாத திருவிலூர்''
...... ''ஊரல்ல அடவி காடே''

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும்போது ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித் தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கிப் பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோவிலைப் பார்க்கும் போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டை ஓவியங்கள் (murals) அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக் காலத்தில், இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன. உதாரணமாகத் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றாலச் சித்ரசபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால், அதிகார பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய கலாசாரத்தை அறியவும் தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும்.

மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத்துறையினரால் வெளியிடபட்டமைக்கு என் மனமார்ந்த

வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும், மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது அவ்வைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி, தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவைகளைப் பண்புக் களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலைச் சிற்பங்களையும், ஓவியக் கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேறுவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோவிலின் தொன்மை கருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு, நெருக்குருக நின்று, நினைந்தேத்தி வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/05/2014
(முனைவர் ரா. கண்ணன்)

**ப. தனபால்,** எம்.ஏ., பி.எல்.,
ஆணையர்
இந்து சமய அறநிலையத்துறை



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம்,
சென்னை - 600034.
அலுவலகம் : 044-2833 4815
நிகரி : 044-2833 4816
மின்னஞ்சல் : tn.endowments@gmail.com

## வாழ்த்துரை

"கால்களால் பயன்என் கறைக்கண்டன் உறை கோயில்
கோலக்கோபுரக் கோகரணம் சூழாக் கால்களால் பயன்என்"

என்னும் நாவுக்கரசரின் நன்மொழிக்கேற்ப ஆயிரம் நாமம் உரைப்பினும் அணுப்பொழுதாவது அவன் அருளாலே அவன் தலம் நின்று அவன் தாள் வணங்கி மகிழ்வதற்கு ஈடில்லை என்பார்கள். இப்பேரின்பத்தை எந்நாளும் அனுபூதியடையக் கிடைத்த வாய்ப்பு வாழ்நாளில் கிடைத்த பிறவிப் பயனாகும்.

சமயத்தின் மூலம் உயர் பண்பினையும் ஒழுக்கத்தையும், நம்பிக்கையையும், இடர்ப்பாடுகளைச் சமாளிக்கும் மனப்பான்மையையும் ஏற்படுத்துதல் முடியும். உண்மை, தூய்மை, அன்பு, நேர்மை, அயராத நம்பிக்கை போன்ற உயர் பண்புகளை மக்களிடையே ஏற்படுத்தி மனித ஆளுமை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுவது திருக்கோயில்கள் சார்ந்த பண்பாட்டு அசைவுகளே ஆகும். அதனால்தான் அரசன் முதல் சாமாணியன் வரை அவரவர் அரண்மனைகளையும் இல்லங்களையும் காப்பதைவிட ஆலயங்களைக் காத்து வந்தனர். அந்த வகையில் தமிழகத்தின் ஒவ்வொரு தலமும் ஒரு சிறப்புப் பெற்றவை. தலங்கள் தோறும் தரிசிப்பதால் முன்னோர்கள் தடம் பதித்த மண்ணில் நாமும் சென்று நிற்கும் புண்ணியம் அடைந்தவர்களாகிறோம்.

நல்லறம் செய்து நற்கதி எய்திட சென்றிடுவீர்! சிறப்புப் பெற்ற திருக்கோயில்களுக்கு பக்தி நெறியினிற் சென்று பரகதிவேட்கையராகிப் பாவம் நீங்கிச் சித்திபெற முயல்வோர்க்கு இந்நூல் பெரிதும் ஆற்றுப்படுத்தும்.

இவ்வழிகாட்டி நூல் வெளிவர உதவிய நல் உள்ளங்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்து அனைவரும் இறைவன் திருவருளால் எல்லா வளமும் பெற்று பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

நன்றி

( ப. தனபால் )

**ந. திருமகள்,** பி.எஸ்.சி., எம்.எல்.,
கூடுதல் ஆணையர் (விசாரணை)/
இணை ஆணையர், வேலூர் (கூ.பொ),



இந்து சமய அறநிலையத்துறை
119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம்,
சென்னை - 600034.

# வாழ்த்துரை

பாரம்பரியமிக்க சீரிய கலாச்சாரமும் பண்பாடும் ஓங்குசீர் புகழோடு விளங்குவதற்கு தமிழர்கள் ஆற்றியுள்ள அறமே காரணமாகும். இந்த அறத்தின் மையக்களமாக ஒரு பொது இடம் தேவைப்பட்டது. அதன் வெளிப்பாடுதான் நாளடைவில் திருக்கோயில் திருத்தலங்களாகத் தோன்றின. இதன்மூலம் சமூகத் தேவைகள் நிறைவு செய்யப்பட்டன. இதுவே தமிழ் மக்களின் அடிநாதமாக விளங்கியது.

வாழப்படுகின்ற தன்மை பயனுள்ளதாக இருக்கவேண்டுமென்று அறச்சாலைகளை உருவாக்கினார்கள். உரைக்கப்படுகிற பொருளும் பயனுள்ளதாக இருக்கவேண்டும் என இலக்கியத்தைப் படைத்தார்கள். இவ்விலக்கியக் காலத்திற்குப் பின்னால் பக்தி இயக்க காலத்தில் பக்தி இலக்கியங்கள் தோன்றின. இக்காலங்களில் அறச்சாலைகளில் ஆற்றல் பெற்ற தலங்கள் சிறப்புக்குரிய திருத்தலங்களாகப் போற்றப்பட்டன. அத்தலங்களுக்குத் தல வரலாறுகளும் எழுந்தன. இப்பெருமை பெற்ற திருத்தலங்களில் ஒவ்வொரு ஆன்மிக அன்பர்களும் கால் பதிக்க விரும்பினர். அந்த விருப்பமே நாளடைவில் புனித யாத்திரையாக உருவெடுக்கத் தொடங்கியது. அந்த வகையில் ஒவ்வொரு ஆன்மிக அன்பர்களின் பேரவாவை நிறைவேற்றும் நோக்கில்

மாசில் தொண்டர் மலர்கொண்டு வணங்கிட
ஆசையார அருள் நல்கிய செல்வந்தர்கள்

கொடுத்துதவிய பெருங்கொடைகளாலும், துறைசார்ந்த ஆக்கப்பணிகளாலும் வானளாவிய கோபுரங்களைக் கொண்டு விளங்கும் திருக்கோயில்களுக்குப் பெருமையோடு வழிகாட்டும் வகையில் முகவரியும் வெளியிட்டிருப்பது பெருமகிழ்வுக்குரிய செய்தியாகும்.

திருக்கோயில் திருத்தலங்களுக்குப் புனித யாத்திரையாக செல்லும் ஆன்மிக அன்பர்களுக்கு பயணம் லயிக்கும் என்பார்கள். திருவருளை நினைந்து மேற்கொள்ளும் பயணம் இனிதாய் அமையும் வகையில் தலவரலாறோடு ஆற்றுப்படுத்தும் இந்நூல் ஆன்மிக அன்பர்களுக்குப் பெரும் மகிழ்வை ஏற்படுத்தும். இறையன்பர்களின் உள்ளக்கிடக்கையைக் கருத்தில் கொண்டு ஆணையர் திரு. ப. தனபால் அவர்கள் உத்தரவின் பேரில் தமிழகத்தில் மாவட்டந்தோறும் வழிகாட்டி நூல் வெளியிட்டிருப்பது அறநிலையத்துறையின் புதிய வரவாகும். இந்நூலினை அச்சேற்றுவதற்குதவிய அத்துணை அன்பர்களையும் மனமார வாழ்த்துகிறேன்.

வாழ்த்துகள்

7/4/14

( ந. திருமகள் )

# வேலூர் மாவட்டம் – திருக்கோயில்கள்

## பொருளடக்கம்

## வேலூர் மாவட்டம் – ஒரு முன் பார்வை

வடஆற்காடு என ஒன்றாக இருந்த மாவட்டம் திருவண்ணாமலை மாவட்டம் என பிரிவு செய்யப்பட்ட பிறகு, வடக்கே ஆந்திரத்தின் சித்தூர், திருவள்ளூர் மாவட்டப்பகுதிகள், தெற்கில் திருவண்ணாமலை மாவட்டம், மேற்கில் தர்மபுரி, சித்தூர் மாவட்டப்பகுதிகள், கிழக்கில் காஞ்சிபுரம் மாவட்டமும் எல்லைகளாக அமைந்தன.

கன்னட நாட்டு நந்திமலையில் உற்பத்தியாகும் பாலாறு வாணியம்பாடி வட்டத்தின் வழியாக இம்மாவட்டத்தில் புகுந்து, வளப்படுத்தி வாலாஜா வட்டத்தில் பிரிந்து, காஞ்சிபுரம் மாவட்டத்திற்குள் செல்லுகிறது.

**30.09.1989**–ம் ஆண்டிற்கு பிறகு வருவாய்த்துறையில் ஆற்காடு, வாலாஜா, அரக்கோணம் வட்டங்கள் அடங்கிய இராணிப்பேட்டை வருவாய் கோட்டம், வேலூர், குடியாத்தம் வட்டங்கள் சேர்ந்த வேலூர் வருவாய் கோட்டமும் இணைந்து வேலூர் மாவட்டமாக உருவானது.

**விநாயகர்:–**

இப்பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில்கள் பற்றிய மேல்நோக்குப் பார்வை ஒன்று இங்கு காணலாம்.

இப்பகுதியில் உள்ள விநாயகர் கோயில்கள் மற்ற பகுதிகளைப் போல் இருந்தாலும், தானே தோன்றிய சேண்பாக்கம் செல்வவிநாயகர் கோயில் இங்கு உள்ளது.

இப்பகுதியில் விநாயகர், திருமால் கோயில்களிலும் இடம் பெறும் தன்மையைக் காண்கிறோம். குடியாத்தம் பள்ளி கொண்டா உத்தர ரங்கநாதசுவாமி கோயில் கருடன் சன்னதிக்கு மேல் மணிக்கதவின் இருபுறங்களிலும் துவார பாலகர்களும் அவற்றிற்கு மேலாக தும்பிக்கை ஆழ்வார் எனப்படும் விநாயகர் திருவுருவமும் உள்ளது.

**காசி விஸ்வநாதர்:—**

காசிக்குச் செல்ல முடியாதவர்கள் வணங்குவதற்காக அமைக்கப்பட்ட காசி விஸ்வநாதர் கோயில், அரக்கோணம் வட்டத்தில் இரும்பேடு, வேகா மங்கலம், ஆர்க்காடு வண்ணாங்குளம், குடியாத்தம் ஆலந்தூர், வாலாஜாவில் சுமைதாங்கி மற்றும் ஆயிலம் வாலாஜா ஆகிய ஊர்கள், வேலூர் அகரம், பேரிப்பேட்டை, முஞ்சூர்பேட்டை ஆகிய ஊர்களில் காசி விஸ்வநாதர் என்ற பெயருடன் தேவியின் பெயர் விசாலாட்சி என்ற பெயரிலேயே உள்ள திருக்கோயில்கள் உள்ளன.

**வேணுகோபாலர் கோயில்கள்:—**

விஜய நகர மன்னர்கள் காலத்தில் சிறப்புப்பெற்ற வேணுகோபாலர் கோயில்கள் பல இம்மாவட்டத்தில் உள்ளன.கீழ்க்களத்தூர், மூதூர், ரெட்டிவலம், புத்தூர், பையூர் ஆகிய ஊர்கள் ஆற்காடு வட்டத்திலும்,திருப்பத்தூர் வட்டத்தில் எலவம்பட்டி, கதிரம்பட்டி ஆகிய ஊர்களிலும், வாலாஜா வட்டத்தில் அருங்குணம், தென்நந்தியாலம், பூண்டி வேலூர், வேலூர் விருப்பாட்சிபுரம் ஆகிய இடங்களிலும் உள்ளது. முல்லை

நிலப்பகுதியாக இருந்துள்ள இப்பகுதிகளில் வேணு கோபாலருக்கான இத்திருக்கோயில்கள் அமைந்து உள்ளது வியப்பல்ல.

**முருகன் திருத்தலங்கள்:–**

வள்ளியை மணம் புரிந்து கொண்ட வள்ளிமலை, இரத்தினகிரி பால சுப்பிரமணியர் திருக்கோயில், இராணிப்பேட்டை திமிரி சுப்பிரமணிய சுவாமி கோயில் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

**தர்மராஜா, திரௌபதியம்மன் திருக்கோயில்கள் :–**

இதிகாச மகாபாரத ஈடுபாடுடைய இம்மாவட்டத்தில் சுமார் 20–க்கும் மேற்பட்ட ஊர்களில் தர்மராஜா திரௌபதியம்மன் கோயில்கள் பல அமைந்துள்ளன.

**முனிவர்கள் பெயரால் திருக்கோயில்கள்:–**

காரை கௌதமேஸ்வரர் திருக்கோயில் – கௌதம முனிவர் இருந்த தலம்.

வன்னிவேடு அகத்தீஸ்வரர் திருக்கோயில் – அகத்தியர் வழிபட்ட தலம்.

குடிமல்லூர் திருவத்தீஸ்வரர் திருக்கோயில் – அத்திரி முனிவர் வழிபட்ட தலம்.

விஷாரம் வான்மீகேஸ்வரர் திருக்கோயில் – வான்மீகி வழிபட்ட தலம்.

வேப்பூர் வசிஷ்டேஸ்வரர் திருக்கோயில் –
வசிஷ்டர் வழிபட்ட தலம்.

புதுப்பாடி பாரதீஸ்வரர் திருக்கோயில் –
பாரத்வாஜர் வழிபட்ட தலம்.

அவரக்காடு காச்யபேஸ்வரர் திருக்கோயில் –
காச்யபேரர் வழிபட்ட தலம்.

ஆகிய முனிவர்கள் வாழ்ந்த, வாழ்ந்த வழிபட்ட திருக்கோயில்களாக கருதப்படுகின்றன.

சப்தரிஷிகளும் சிவலிங்கத்தில் ஒடுங்கிய நிலையைக் கொண்டதாக ஒடுக்கத்தூர் சப்தரிஷிஸ்வரர் திருக்கோயில் சிறப்புடன் திகழ்கின்றது.

# தமிழ்நாடு – மாவட்டங்கள்



# வேலூர் மாவட்டம் திருக்கோயில்கள் வழிகாட்டி – வரைபடம்



1. அருள்மிகு ஜலநாதீஸ்வரர் திருக்கோயில், தக்கோலம், அரக்கோணம் வட்டம்.
2. அருள்மிகு மயூரநாதசுவாமி திருக்கோயில், பனப்பாக்கம், அரக்கோணம் வட்டம்
3. அருள்மிகு திருக்குகேஸ்வரர் மற்றும் வாராகியம்மன் திருக்கோயில், பள்ளூர் கிராமம்,
4. அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில், வாலாஜா வட்டம்.
5. அருள்மிகு பிரசன்ன வெங்கடேசப்பெருமாள் திருக்கோயில், திருப்பாற்கடல், வாலாஜா
6. அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில், திருப்பாற்கடல், வாலாஜா வட்டம்
7. அருள்மிகு இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில், சோளிங்கர், வாலாஜா வட்டம்
8. அருள்மிகு தோப்பாளம்மன் திருக்கோயில், சோளிங்கர், வாலாஜா வட்டம்
9. அருள்மிகு சோழபுரீஸ்வரர் திருக்கோயில், சோளிங்கர், வாலாஜா வட்டம்
10. அருள்மிகு கமலவிநாயகர் திருக்கோயில், சோளிங்கர் , வாலாஜா வட்டம்
11. அருள்மிகு தேவிகருமாரியம்மன் திருக்கோயில், நவல்பூர், இராணிப்பேட்டை வட்டம்
12. அருள்மிகு சீனிவாசப்பெருமாள் திருக்கோயில், வாலாஜா வட்டம்
13. அருள்மிகு பாப்பாத்தியம்மன் திருக்கோயில், அம்மூர், வாலாஜா வட்டம்
14. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில், ஐக் அக்ரகாரம் வீதி, ஆற்காடுவட்டம்
15. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், குமரகிரி, ஆற்காடு வட்டம்.
16. அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில், கீழ்மின்னல் கிராமம், இரத்தினகிரி, ஆற்காடு
17. ஷடாரண்ய ஷேத்திரங்கள் (சிவாலயங்கள்)
    - அ) அருள்மிகு ஸ்ரீகிருபாம்பிகை சமேத கௌதம ஈஸ்வரர் திருக்கோயில், காரை, இராணிப்பேட்டை சட்டம்
    - ஆ) அருள்மிகு அகிலாண்டேஸ்வரி சமேத கௌதமாஈஸ்வரர் திருக்கோயில், காரை, இராணிப்பேட்டை வட்டம்
    - இ) அருள்மிகு திரிபுரசுந்தரி சமேத அத்திரியீஸ்வரர் திருக்கோயில், மேல்விஷாரம், வாலாஜா
    - ஈ) அருள்மிகு வடிடையம்மாள் சமேத வால்மீகிஸ்வரர் திருக்கோயில், மேல்விஷாரம், வாலாஜா
    - உ) அருள்மிகு பாலகுஜாம்பிகை சமேத வசிஸ்டேஸ்வரர் திருக்கோயில், வேப்பூர், வாலாஜா
    - ஊ) அருள்மிகு தர்மசம்வர்த்தினி சமேதபரத்வாஜஸ்வரர் திருக்கோயில், புதுப்பாடி, வாலாஜா
    - எ) அருள்மிக ஸ்ரீபர்வதவர்த்தினி சமேத காச்யபேஸ்வரர் திருக்கோயில், அவரக்காடு, வாலாஜா

18. கோட்டை ஜலகண்டேஸ்வரர் திருக்கோயில்,
வேலூர் மாநகர் மற்றும் வட்டம்.

19. அருள்மிகு செல்வவிநாயகர் திருக்கோயில்,
சேண்பாக்கம், வேலூர் வட்டம்.

20. அருள்மிகு செல்லியம்மன் திருக்கோயில், பாலாற்றங்கரை,
வேலூர் வட்டம்

21. அருள்மிகு சோலாபுரியம்மன் திருக்கோயில்,
வேலூர் வட்டம்.

22. அருள்மிகு வேம்புலியம்மன் திருக்கோயில்,
வேலூர் வட்டம்.

23. ஸ்ரீபுரம் பொற்கோவில், திருமலைக்கோடி

24. அருள்மிகு வீர ஆஞ்சநேயசுவாமி திருக்கோயில்,
கொணவட்டம், வேலூர் வட்டம்.

25. அருள்மிகு பொற்கொடியம்மன் திருக்கோயில்,
வல்லண்டராமம், வேலூர் வட்டம்.

26. அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரர் திருக்கோயில்,
விரிஞ்சிபுரம் , வேலூர் வட்டம்.

27. அருள்மிகு எல்லையம்மன் திருக்கோயில், வெட்டுவானம்,
வேலூர் வட்டம்.

28. அருள்மிகு உத்தரரங்கநாதர் திருக்கோயில்,
பள்ளிகொண்டா, குடியாத்தம் வட்டம்

29. அருள்மிகு காசிவிஸ்வநாதசுவாமி திருக்கோயில்,
வேலூர் வட்டம்.

30. அருள்மிகு தாரகேஸ்வரசுவாமி திருக்கோயில்,
வேலூர் வட்டம்.

31. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில், சோழவரம்,
வேலூர் வட்டம்.

32. அருள்மிகு கடம்பவனவாசவியம்மன் திருக்கோயில்,
கணியம்பாடி , வேலூர் வட்டம்.

33. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்,
வேலூர் வட்டம்.

34. அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில், மூஞ்சூர்பட்டு,
வேலூர் வட்டம்.

35. அருள்மிகு சப்தரிஷிஸ்வரர் திருக்கோயில், ஒடுக்கத்தூர்,
வேலூர் வட்டம்.

36. அருள்மிகு சொர்ணமுகீஸ்வரர் மற்றும் சொர்ணவிநாயகர்
திருக்கோயில், காந்தி நகர்

37. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,
காங்கேயநல்லூர் , காட்பாடி வட்டம்

38. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், வள்ளிமலை,
காட்பாடி வட்டம்

39. அருள்மிகு வில்வநாதீஸ்வரர் திருக்கோயில், திருவலம்,
காட்பாடி வட்டம்

40. அருள்மிகு கெங்கையம்மன் திருக்கோயில், குடியாத்தம்
வட்டம்

41. அருள்மிகு படவேட்டு எல்லையம்மன் திருக்கோயில், குடியாத்தம் வட்டம்
42. அருள்மிகு மகாதேவசுவாமி திருக்கோயில், காங்குப்பம், மகாதேவமலை, காட்பாடி வட்டம்
43. அருள்மிகு பத்மாவதி தாயார் சமேத வெங்கடேசப்பெருமாள் திருக்கோயில், மீனூர்மலை,
44. அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில், ஆம்பூர் வட்டம்
45. அருள்மிகு பெரிய ஆஞ்சநேயர் சுவாமி திருக்கோயில், ஆம்பூர் வட்டம்
46. அருள்மிகு காளியம்மன் திருக்கோயில், ஆம்பூர் வட்டம்
47. அருள்மிகு புத்துக்கோயில் (எ) புத்துமாரியம்மன் திருக்கோயில் , வாணியம்பாடி வட்டம்
48. அருள்மிகு சாமுண்டீஸ்வரியம்மன் திருக்கோயில், நாட்றம்பள்ளி வட்டம்
49. அருள்மிகு கஜேந்திர வரதராஜப்பெருமாள் திருக்கோயில், திருப்பத்தூர் வட்டம்.
50. அருள்மிகு கோட்டை பிரம்மேஸ்வரர் திருக்கோயில், திருப்பத்தூர் வட்டம்.
51. அருள்மிகு சுந்தர வீராஞ்சநேயர் திருக்கோயில், திருப்பத்தூர் வட்டம்.
52. அருள்மிகு மண்குன்றுமலை, சென்னகேசவப்பெருமாள் திருக்கோயில், பேராம்பட்டு
53. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், பசலிக்குட்டை, திருப்பத்தூர் வட்டம்
54. அருள்மிகு வெற்றிவேல் முருகன் திருக்கோயில்,ஜலகாம்பாறை, திருப்பத்தூர் வட்டம்.
55. அருள்மிகு அஞ்சனாட்சி சமேத மணிகண்டீஸ்வரர் திருக்கோயில், திருமாற்பேறு,



# 1. அருள்மிகு ஜலநாதீஸ்வரர் திருக்கோயில், தக்கோலம்.



இக்கோயில் அரக்கோணத்தில் இருந்து 14 கி.மீ. தூரத்திலும், சென்னையில் இருந்து பூந்தமல்லி வழியாக 64 கி.மீ. தூரத்திலும், காஞ்சிபுரத்தில் இருந்து 27 கி.மீ. தூரத்திலும் உள்ளது. ரயில் பயணிகள் அரக்கோணத்தில் இறங்கி, அங்கிருந்து தக்கோலத்திற்கு பஸ்சில் செல்லலாம்.





தீண்டா திருமேனியான ஜலநாதீஸ்வரர் கோயில் தக்கோலத்தில் உள்ளது. இக்கோயிலில் அபூர்வ கோலத்தில் ஸ்ரீதட்சிணாமூர்த்தி காட்சி தருகிறார். இந்தத்தலம் ஒரு குரு பரிகாரத் தலமாக விளங்குகிறது. தலை சாய்த்து உட்கார்ந்த நிலையில் இருக்கும் தட்சிணாமூர்த்தி பக்தர்களின் குறைகளை செவிசாய்த்து கேட்டு தீர்த்து வைக்கிறார்.

இக்கோயிலில் கோஷ்டத்தில் யோக தட்சிணாமூர்த்தி உத்குடி ஆசனத்தில் அமர்ந்து இருக்கிறார். இவர் கல்லால மரத்தின் கீழ், இடது காலை மடித்து பீடத்தில் இருத்திக்கொண்டு, வலது காலை கீழே தரையில் வைத்து உத்குடிக வீராசன நிலையில் அமர்ந்துள்ளார். ஒரு கையில் ருத்ராட்சமாலையும், மற்றொரு கையில் அக்னி ஜுவாலையும் உள்ளது. வலது கையில் சின் முத்திரை, இடது கையில் புத்தகம் வைத்துள்ளார்.

தலைக்கு மேல் கல்லால விருட்சம் உள்ளது. பிற இடங்களில் உள்ளது போல் இங்கு காலடியில் முனிவர்கள் இல்லை. கீழே காலடியில் நாகம், மான் உள்ளது. ஒரு காதில் மட்டும் குண்டலம் இருக்கிறது. இவர் தலையை இடதுபுறம் சாய்த்து வளைந்த பாவனையில் இருக்கிறார். இந்த அபூர்வ கோலத்தை வேறெங்கும் தரிசிக்க முடியாது.

### நிறம் மாறும் சிவலிங்கம்

இங்குள்ள மூலவர் ஜலநாதீஸ்வரர் உத்ராயன புண்ணிய காலத்தில் (தை முதல் ஆனி வரை) இளம் சிவப்பு நிறமாகவும், தட்சிணாயன காலத்தில் (ஆடி முதல் மார்கழி வரை) வெள்ளையாகவும் காணப்படுவார். இது போன்ற வித்தியாசமான



நிறம் மாறும் லிங்கம் அபூர்வம். இவர் மணல் லிங்கம் என்பதால் அபிஷேகம் கிடையாது. மஞ்சள் காப்புதான் சார்த்தப்படுகிறது. தீண்டாத்திருமேனி என பெயர் பெற்ற ஜலநாதீஸ்வரரை யாரும் தொட்டு பூஜை செய்வது கிடையாது. இதுவும் இந்தக் கோயிலின் ஒரு தனிச்சிறப்பு. சிவன் சன்னிதியில் இருந்து அபிஷேக தீர்த்தம் வெளியேறும் கோமுகம், பூதகணத்தின் முகமாக சிற்ப வேலைப்பாட்டுடன் உள்ளது.

## வடக்கு சன்னதி அம்பாள்

வெளிப்பிரகாரத்தில் நின்ற நிலையில் காட்சி தரும் கிரிராஜ கன்னிகாம்பாளை தரிசித்து விட்டுத் தான் சுவாமியைத் தரிசிக்க வேண்டும் என்பது ஐதீகம். அம்பாள் சன்னிதியின் அமைவிடமும் சிறப்பானதே. பவுர்ணமி, அஷ்டமியில் தரிசனம் செய்தால் சிறப்பான நலம் சேரும் எனப்படுகிறது.

சிவன் சன்னிதி கோஷ்டத்திலுள்ள துர்க்கை சாந்தமே வடிவமாக அருள் செய்கிறாள். இத்தலத்தை திருவூறல் என நாவுக்கரசரும், சுந்தரரும் பாடியுள்ளனர். இவ்வூரில் ஏழு சிவாலயங்கள், ஏழு விநாயகர் கோயில்கள், ஏழு கிராம தேவதை கோயில்கள் உள்ளன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 2. அருள்மிகு மயூரநாதசுவாமி திருக்கோயில், பனப்பாக்கம்.



வெற்றியை தந்து நம் வாழ்வில் வேதனைகளைத் தீர்த்து நோயற்ற வாழ்வைத் தரும் சிவபெருமான் உலகம் முழுவதும் பல்வேறு திருப்பெயர்கள் கொண்டு அருள் புரிந்து வருகிறார்.

அவ்வகையில் அரக்கோணம் வட்டம், பனப்பாக்கம், அருள்மிகு மயூரநாத சுவாமி கோவில் தெற்கு நோக்கி மூன்று நிலை ராஜகோபுரத்துடன் கம்பீரமாக காட்சி அளிக்கிறது. கோவிலில் உள்ள மகா கணபதி உள்ளிட்ட பரிவார தேவதைகளுக்கு தனித்தனி சன்னதிகள் உள்ளன. மயூரநாதர் சுயம்புமூர்த்தியாக ஜோதிப்பிழம்பாக காட்சி அருளுகிறார்.



இது அரக்கோணம் இரயில் நிலையத்திலிருந்து 24 கி.மீ. காவேரிப்பாக்கம் பஸ்நிலையத்திலிருந்து 12 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

பிரதோஷம், சங்கடஹர சதுர்த்தி கிருத்திகை ஆகிய நாட்களில் சிறப்பு அபிஷேகமும், சிறப்பு அலங்காரமும், அர்ச்சனையும், தீபாராதனையும் நடைபெறுகிறது.

சித்திரை மாதத்தில் 10 நாட்கள் பிரம்ம உற்சவ விழா வெகு சிறப்பாக நடைபெறுகிறது. தை மாதத்தில் தைப்பூச விழா, மாசி மாதத்தில் மகா சிவராத்திரியும் சிறப்பாக நடைபெறுகிறது. இவை தவிர மாதந்தோறும் பல்வேறு விழாக்கள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

செவ்வாய் கிழமைகளில் துர்கா தேவிக்கு சிறப்பு அபிஷேகம், சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு ராகுகால பூஜை நடைபெறுகிறது. வியாழக்கிழமைகளில் தட்சிணாமூர்த்திக்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு அர்ச்சனை தீபாராதனையும் நடக்கிறது. தடைப்பட்ட திருமணங்கள் தடையின்றி நடைபெறவும், குழந்தைபேறு கிட்டவும், சகல செல்வங்களும் தந்து நம் வாழ்வை செம்மையாக்க சவுந்தரநாயகி உடனுறை மயூரநாதசாமியை வணங்குதல் நடைமுறையில் உள்ளது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com




# 3. அருள்மிகு திருக்குகேஸ்வரர் மற்றும் வாராகியம்மன் திருக்கோயில், பள்ளூர் கிராமம், அரக்கோணம் வட்டம்



இத்திருக்கோயில், அரக்கோணத்திலிருந்து சற்று தொலைவிலுள்ள திருமால்பூர் பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தில் அருள்மிகு திருக்குகேஸ்வரர் மேலும் திரிபுரசுந்தரியம்மன் சன்னதி உள்ளது. இறைவன் லிங்கம் வடிவில் அருளுகிறார். சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், முருகன் வள்ளி தெய்வானை, துர்க்கை, இராமநாதீஸ்வரர், நவக்கிரகம் போன்ற சன்னதிகள் உள்ளன. இத்திருக்கோயில் அவ்வையாரால் பாடப்





பெற்று, வழிபடப்பட்ட தலமாகும். அருள்மிகு திருக்குகேஸ்வரர் கோயிலுக்கு சற்று தொலைவில் அருள்மிகு வராகி அம்மன் திருக்கோயில் தனியே அமைந்துள்ளது.

இத்திருக்கோயிலில் ஒரு கால பூஜை நடைபெறுகிறது. கிருத்திகை, பௌர்ணமி, பிரதோஷம், சங்கடஹர சதுர்த்தி , போன்ற மாதபூஜைகளும், மகாசிவராத்திரி, தமிழ்வருடப் பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, விநாயகர் சதுர்த்தி வருடபூஜைகளும் உபயதாரர்களால் நடைபெறுகிறது. இங்கு பிரம்மோற்சவம் 15 நாட்கள் நடைபெறுகிறது. குழந்தை வரம், திருமணத்தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம்





நிவர்த்தி செய்தல், கெடுவினைத் தீங்கு காத்தல், வியாபார அபிவிருத்தி, அம்மைக்கு பிராத்தனை போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக மேற்கொள்ளப் படுகின்றன.

இத்திருக்கோயில் வராஹி அம்மனுக்கு புதிய திருத்தேர் செய்யப்பட்டுள்ளது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை
மாலை 7 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com



# 4. அருள்மிகு பச்சையம்மன் திருக்கோயில், வாலாஜாப்பேட்டை, வேலூர் மாவட்டம்.



வாலாஜாப்பேட்டை அம்மூர் ரயில் நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரமும், பேருந்து நிலையத்திலிருந்து அரை கிலோ பெங்களூர் செல்லும் பிரதான சாலையில் இருந்து அரை கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

இத்திருத்தலத்தில் அருள்மிகு பச்சையம்மன் அமர்ந்த திருக்கோலத்திலும், வாமுனி, செம்முனி, மதுரை வீரன், விநாயகர், நாகம் மற்றும் ஆஞ்சநேயர் சுற்று பிரகார சன்னதிகள் நுழைவாயிலிருந்து இடப்புறத்திலிருந்து வலப்புறம் வரை அமைந்துள்ளது.






இத்திருக்கோயிலில் ஒரு கால பூஜை நடைபெறுகிறது. குழந்தை வரம், திருமணத் தடை நீங்குதல், காள சர்ப்பதோஷம், நிவர்த்தி செய்தல், கெடுதல் தீங்கு காத்தல் , வியாபார அபிவிருத்தி வாகன பாதுகாப்பு பூஜை போன்றவை பக்தர்களின் பி ர ா த் த னை க ள ா க மேற்கொள்ளப்படுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்:

காலை **6** மணி முதல் **7** மணி வரை

மாலை **7** மணி முதல் **8** மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : **04172 – 252295**

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com



# 5. அருள்மிகு பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில், திருப்பாற்கடல்.



இத்திருத்தலம் வாலாஜா வட்டத்தில் சென்னை – பெங்களூர், நெடுஞ்சாலையில் காவேரிப்பாக்கம் பேருந்து நிறுத்தத்தில் இருந்து 3 கி.மீ. தெற்கு திசையில், திருப்பாற்கடல் என்னும் இயற்கை எழிலுடன் கூடிய சிற்றூரில் கிராமத்தின் முடிவில் தனித்தன்மையோடு அமைந்துள்ளது.

இத்திருத்தலம், மிகப்பழமையானதும், புராதன சிறப்பு மிக்கதும் ஆகும். ஆவுடையாரின்மேல் ஸ்ரீ பிரசன்ன வெங்கடேசபெருமாள்





எழுந்தருளியிருப்பது வேறெங்கும் காண முடியாத அபூர்வமான தரிசனமாகும். அரியும் சிவனும் ஒன்றென உறுதி செய்து விளக்கும் வகையில் இத்திருத்தலத்தில் ஆவுடையர் மீது இருந்து பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார் அருள்மிகு பிரசன்ன வெங்கடேச பெருமாள்.

'சத்திய விரதம்' என்கிற காஞ்சி சேத்திரத்தில் சதுர்முக பிரம்மா அஸ்வமேத யாகத்தால் பகவானாகிய ஸ்ரீ ப தேவனை வணங்கும் போது யதார்த்தமாக சில மகாத்மாக்களுக்கு பரிபூரண அனுக்கிரகம் செய்ய 'திருப்பாற்கடல் ' என்னும் கிராமத்தில் (பிரளய ரோதகர் என்னும் ஸ்ரீரங்கநாதர் என்றும் பெயர் உண்டு) தோன்றிய இறைவனை உள்ளபடி வணங்க வந்த புண்டரீகமகரிஷி–க்கு மேற்படி சன்னதி காணாமையால் அடுத்த தூகேஸ்வரர் சன்னதியில் போய் பார்த்ததில் லிங்கமும் ஆவுடையாரும் இருக்கக்கண்டு மன வருத்தத்துடன் அப்புண்டரீக மகரிஷி திரும்பி விட்டார் என்பது புராண வரலாறு ஆகும்.

ஸ்ரீஅரியையும், சிவனையும் ஒன்றாக தரிசிக்கும் வாய்ப்பு வெறெங்கும் கிடைக்காத ஒன்று. காணற்கரிய இத்தரிசனத்தை காணும் பக்தர்களுக்கு எண்ணியவை எண்ணியவாறு நிறைவேறும்.

இத்திருக்கோயிலில் வைகுண்ட ஏகாதசி திருவிழா மிக சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. பல கிராமங்களில் இருந்து பெருந்திரளாக பக்தர்கள் இத்திருவிழாவிற்குவருகை தந்து பெருமானை வழிபடுகின்றனர். பெருமானுக்கு விசேஷமாக





பஜனைக்குழுக்கள் பெருமாள் புகழ் பாடி ஆடி வருகின்றனர். இது மட்டுமின்றி தமிழ், ஆங்கில புத்தாண்டு கோகுலாஷ்டமி நவராத்திரி பிரதி சனிக்கிழமை தீபாவளி, தனுர்மாதத்தில் விசேஷ பூஜைகள் ஆகியவை நடைபெறுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 6. அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில், திருப்பாற்கடல்



இத்திருக்கோயில் திருப்பாற்கடலிலுள்ள பிரசன்ன வெங்கடேச பெருமாள் கோயிலுக்கு அருகில் தெற்கு நோக்கியவாறு அமைந்துள்ளது.

திருப்பாற்கடல் வெங்கடேசப்பெருமாள் கோயிலில் திருவாரதனம் செய்து வந்த கிருஷ்ண பட்டர் கனவில் பெருமாள் தோன்றினார். இக்கோயில் அருகில் மூங்கில் புதரில் அரங்கநாதராக அத்தி மரத்தில் நான் இருக்கிறேன். நாளை காலை நான் வெளியே வர ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கான வேலையை நாளை காலையில் ஏற்பாடு செய்க ! எனத் தெரிவித்தார்.



அவ்வறிவுறுத்தலுக்கு ஏற்ப அர்ச்சகர் அங்கிருந்த இருளர் இருவரை கொண்டு அவ்விடத்திலிருந்த புதரை அப்புறப்படுத்தினார். அப்போது அங்கிருந்து அத்திமரத்தின் கீழ் 4 மீட்டர் நீளமுள்ள அரங்கநாதர் திருவுருவம் காணப்பட்டது. அத்திருவுருவம் எடுத்து வந்து நிலைப்படுத்தப்பெற்றது. அரங்கநாதர் திருக்கோயிலும் எழுப்பப்பெற்றது.

அரங்கநாதப் பெருமாள் கோயிலின் மேற்குச்சுவரிலும், தெற்குச்சுவரிலுள்ள விசய நகர தேவராய மகாராயர் யானை வேட்டை கண்டார் சகம் 1364 துர்மதி ஆண்டு கல்வெட்டு மகமண்டலேசுவர கந்தக்கட்டாரி சாளுவ திப்பய்ய தேவ மகாராயர் கல்வெட்டு கோயிலுக்காக சில வரிகளை தள்ளுபடி செய்ததை குறிக்கிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 7. அருள்மிகு இலட்சுமிநரசிம்மசுவாமி திருக்கோயில், சோளிங்கர்



சென்னை – பெங்களூர் இருப்புப்பாதையில் அரக்கோணத்திலிருந்து மேற்கே 27 கி.மீ. தொலைவிலும், சென்னை – திருப்பதி இருப்புப்பாதையில் திருத்தணி ரயில் நிலையத்திலிருந்து 24 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. வேலூரிலிருந்தும் சித்தூரிலிருந்தும் இவ்வூருக்கு பேருந்து வசதி உள்ளது.

சோழர்கள் ஆட்சியில் சோளசிங்கபுரம், சோளசிம்மபுரம் எனக் கல்வெட்டுகளால் அறியப்பட்டு இன்று சோளிங்கர் என அழைக்கப்படும் “கடிகாசலம்” தொண்டை நாட்டு திவ்விய தேசங்களில் ஒன்றாகும். அரக்கோணம் ரயில் நிலையத்தில் இருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ள தலம்.



விஸ்வாமித்திரர் ஒரு நாழிகை நேரம் இத்தலத்தில் நரசிம்மனை வேண்ட கண நேரத்தில் நரசிம்மர் காட்சி தந்து, அதனால் பிரும்ம ரிஷி என்ற பட்டம் பெற்றார் என்பது வரலாறு.

இந்தத் தகவலை அறிந்த அத்திரி, பிருகு, குத்சர், வசிஷ்டர், கௌதமர், காஸ்யபர், ஆங்கீரசர் ஆகிய சப்தரிஷிகளும், வாம தேவர் என்னும் முனிவரும் பிரகலாதனுக்குத் தூண்பிளந்து தோன்றிய நரசிம்மரைக் கண நேரம் துதித்துக் காண வேண்டும் என விரும்பினர். ஆதலால், இம்மலையில் வந்து தவமியற்றத் துவங்கினர்.

இராமாவாதாரம் முடிந்து திருமால் வைகுந்தம் செல்லும் நேரம், தாமும் உடன் வருவதாகத் தெரிவித்தார் அனுமார். இராமரோ இடைமறித்து கடிகாசலம் சென்று அங்கு தவம் புரியும் சப்தரிஷிகள் மற்றும் வாமதேவர் தவத்திற்கு இடையூறு ஏதும் நேராத வண்ணம் காக்குமாறும், அதன்பிறகு வைகுந்தம் வருமாறும் தெரிவித்தார். காலன், கேயன் என்னும் அரக்கர்கள் இம்மலையில் தவம் செய்யும் ரிஷி மற்றும் முனிவர்களுக்கு இடைஞ்சல் அளிக்கவே, அவர்களோடு சண்டையிட்டான் அனுமன், களைத்த நேரத்தில் இராமனை வேண்ட அவர் சங்கு சக்கரம் அளிக்க அதன் மூலம் போரிட்டு அவர்களை அழித்தான் ஆஞ்சனேயன்.

இறுதியில் ரிஷிகளின் தவத்தினை மெச்சிய திருமால் நரசிம்மராகக் காட்சி தந்தார். அவர்களோடு அனுமனும் தரிசனம் செய்தான்.





நரசிம்ம அவதாரத்தைக் கண்டுகளித்த அனுமன் ஆனந்தம் அடைந்து நிற்க, ‘‘நீ நமது முன்பமர்ந்து உனது யோகத்தவ வலியால் யோக ஆஞ்சனேயராக இருந்து தீராத பிணிகளையும் தீர்த்து கலியுக முடிவில் நான் வைகுந்தம் செல்லும் போது என்னுடன் வருவாயாக’’ என அருளினார்.

அதனால் முனிவர்களுக்குக் காட்சி தந்த பெரிய மலையில் நரசிம்மராகவும், எதிரில் அமர்ந்த திருக்கோலத்தில் யோக பட்டம் சங்கு சக்கரத்துடன் சின்ன மலையில் அமர்ந்து அனுமனும் அருளும் யோகத் திருத்தலம் ‘‘சோளிங்கர்’’ ஆகும்.





இத்தலத்தின் புராணச் சிறப்புகளை ஸ்ரீவிஷ்ணுபுராணமும், பாத்ம புராணமும் செய்திகளாகத் தெரிவிக்கின்றன.

பெரிய மலையில் யோக நரசிம்மர் வீற்றிருந்த திருக்கோலத்தில் தெற்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் அக்காரக்கனி என்ற பெயருடன் காட்சி தருகிறார். அமிருதபலவல்லி என்ற தனிக்கோயிலில் நாச்சியாரும் உற்சவராக பக்தவத்சலப்பெருமாள் (இவரே தக்கான்) அமிருதபல தீர்த்தம், (தக்கான்குளம்), பாண்டவதீர்த்தம் என்னும் திருக்குளங்களுடன் சிம்ம விமானத்தில் காட்சி தரும் தலம் “சோளிங்கர்” ஆகும்.

எதிரில் உள்ள மலையில், யோக ஆஞ்சனேயராக நான்கு திருக்கரங்களுடன் சங்குசக்கரத்துடன் அனுமார் காட்சி தருகிறார்.

யோக பட்டத்துடன் அனுமனும், நரசிம்மனும் அருளுவதால் பேய், பிசாசு, பில்லி, சூனியம் போன்ற நாள்பட்ட நோய்கள் நீக்கும் சக்தியுடைய தலம் எனப்படுகிறது.

காஞ்சி வரதனின் கருட சேவையை தொட்டாச்சாரியார் இங்கிருந்து கண்டார்.

துர்வாச முனிவர் சாபத்தால் ஏற்பட்ட பாபத்திற்கு புதன் இத்தலத்தில் வழிபட்டு பாவம் நீங்கிய திருத்தலம்.

108 திவ்ய தேசங்களுள் ஒன்று நம்மாழ்வார், பேயாழ்வார் மற்றும் திருமங்கையாழ்வாரால் மங்களசானம் செய்ய பெற்ற ஸ்தலம்.



### சிறப்பு திருவிழாக்கள்

அனைத்து மாதங்களிலும் நடைபெறுகிறது. கார்த்திகை மாதத்தில் வெள்ளி, ஞாயிற்றுக்கிழமைகள் மிக சக்தி வாய்ந்த நாட்களாக கருதப்பட்டு பொதுமக்களால் பெரிதும் போற்றப்படும் மாதம் ஆகும்.

### மலைக்கோயில்கள் தரிசன நேரம் :

காலை 7 மணி முதல் மாலை 7.00 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 262 252
மின்னஞ்சல் : shnarasimhar@gmail.com
இணையதளம் : www.sholinghur narasimhar.com



# 8. அருள்மிகு தோப்பாளம்மன் திருக்கோயில், சோளிங்கர், வாலாஜா வட்டம்



சோளிங்கர் பேருந்து நிலையத்திலிருந்து சற்று தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது.

முன் காலத்தில் திருக்கோயிலை சுற்றி புளியந்தோப்புக்கள் இருந்தன. நடுவில் கோயில் அமைந்து இருந்தது. ஆகவே அப்போது





தோப்பிலம்மன் என காரணப்பெயரால் அழைக்கப்பட்டது. தற்போது கால போக்கில் தோப்பாளம்மன் என அழைக்கப்படுகிறது.

இத்திருத்தலத்தில் இறைவி அருள்மிகு தோப்பாளம்மன், இறைவியின் திருக்கோலம் சுயம்பு வடிவில் உள்ளது. சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், பெருமாள் நவக்கிரகம் சன்னதிகள் உள்ளன.

இத்திருக்கோயிலில் ஒரு கால பூஜை நடைபெறுகிறது. குழந்தை வரம், திருமணத் தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி, கெடுதல் தீங்கு காத்தல், வியாபார அபிவிருத்தி, அம்மைக்கு பிராத்தனை போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக வேண்டப்படுகின்றன.








## திருக்கோயில் தரிசன நேரம்

காலை **6** மணி முதல் **7** மணி வரை

மாலை 7 மணி முதல் **8** மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் **: 04172 – 252295**

மின்னஞ்சல் **:** vallimalaimurugar7@gmail.com

# 9. அருள்மிகு சோழபுரீஸ்வரர் திருக்கோயில், சோளிங்கர், வாலாஜா வட்டம்



சோளிங்கர் பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து ஆறு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தில் அருள்மிகு சோழபுரிஸ்வரர் சன்னதியில் இறைவன் லிங்க வடிவில் அருள்புரிகிறார். கனக துர்க்கையம்மன் சன்னதி சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், முருகன் வள்ளி தெய்வானை, துர்க்கை, பைரவர், நவக்கிரகம் சன்னதிகள் உள்ளன. இங்கு கொடி மரம் உண்டு. முற்காலத்தில் சோளிங்கர் பெருமாள் கோயில் ஐயங்கார் முன்னிலையில் கொடியேற்றப்பட்டது.





சோழர் காலத்தில் கட்டப்பட்ட திருக்கோயில் ஆதலால் அக்காலக் கல்வெட்டுக்கள் உள்ளன. விக்டோரியா மகாராணியால் விளக்கு கம்பம் நிறுவப்பட்டுள்ளது.

இத்திருக்கோயிலில் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது. கிருத்திகை, பௌர்ணமி, பிரதோஷம், சங்கடஹர சதுர்த்தி போன்ற மாதபூஜைகளும், மகாசிவராத்திரி, தமிழ்வருடப்பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, விநாயகர் சதுர்த்தி போன்ற வருடபூஜைகளும் நடைபெறுகிறது. இங்கு பிரம்மோற்சவம் 15 நாட்கள் நடைபெறுகிறது. பல வாகனங்கள் உள்ளன. குழந்தை வரம், திருமணத் தடை நீங்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி செய்தல், கெடுதல் தீங்கு காத்தல், வியாபார அபிவிருத்தி போன்ற பிராத்தனைகள் பக்தர்களால் மேற்கொள்ளப்பட்டு நடைபெறுகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை

மாலை 7 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 10. அருள்மிகு கமல விநாயகர் திருக்கோயில், சோளிங்கபுரம்.



சோளிங்கரிலிருந்து திருத்தணி செல்லும் சாலையில், சோளிங்கர் பஸ்நிலையத்திருந்து 1–1/2 கி.மீ. தூரத்தில், அரக்கோணம் ரயில் நிலையத்தில் இருந்து 27 கி.மீ. தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

முதலில் குளக்கரை விநாயகராக இருந்து பொதுமக்கள் பங்களிப்பின் மூலம் புதியதாக 1932–ம் ஆண்டு சிறிய கோயிலாக கட்டப்பட்டது. மீண்டும் 1958ம் ஆண்டு கருங்கற் கோயிலாக கட்டி கும்பாபிஷேகம் நடைபெற்றது. வேண்டிய வரத்தினை அளிப்பவர்.



சக்தி விநாயகர் ஆவார். காமிக ஆகமம் முறையில் பூஜை நடைபெறுகிறது. விநாயகர், தட்சணாமூர்த்தி, முருகன், வள்ளி தெய்வானை, துர்கை, நவக்கிரகம் என சுற்றுப்பிரகார சன்னதிகள் நுழைவாயிலிருந்து இடம் இருந்து வலப்புறம் வரை உள்ளது.

இத்திருக்கோயிலில் ஆடி முதல் வெள்ளி, ஆவணி விநாயகர் சதுர்த்தி, ஆங்கில வருடப்பிறப்பு, தமிழ் வருட பிறப்பு, ஆகிய நாட்களில் சிறப்பு பூஜைகள் நடைபெறுகிறது. இக்கோயிலில் குழந்தை வரம் வேண்டியும், நோய் தீர்க்கவும் பக்தர்கள் மேற்கொள்ளும் பிராத்தனைகள் உள்ளன.

### திருக்கோயில் தரிசன நேரம் :

காலை 6 மணி முதல் 10 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 11. அருள்மிகு தேவிகருமாரியம்மன் திருக்கோயில், நவல்பூர், இராணிப்பேட்டை



இராணிப்பேட்டை பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், வாலாஜா ரயில் நிலையத்திலிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தின் மூலவரின் பெயர் தேவி கருமாரியம்மன் என்பதாகும். அம்மன் மூலவர் சிரசு வடிவில் உள்ளது . சுற்றுப்பிரகார சன்னதிகளாக விநாயகர், இராமர், நவக்கிரகம், தட்சணாமூர்த்தி சன்னதிகள் உள்ளன.



இத்திருக்கோயிலில் ஒரு கால பூஜை நடைபெறுகிறது. தமிழ்வருடபிறப்பு, ஆடிவெள்ளி, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, பொங்கல், குத்து விளக்கு பூஜை ஆகிய வருட பூஜைகளும் உள்ளன. பிரதி வெள்ளிக்கிழமை அம்மனையும், பிரதி வியாழன் தோறும் தட்சணாமூர்த்தியையும் வணங்கி, திருமண தடை நீங்க காணிக்கை செலுத்துகிறார்கள். இத்திருக்கோயில் 150 ஆண்டுகளுக்கு முந்தியது ஆகும்.

குழந்தை வரம், திருமணத்தடை நீங்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி செய்தல், கெடுதல் தீங்கு காத்தல், வியாபார அபிவிருத்தி, அம்மைக்கு பிராத்தனை போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக உள்ளன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை

மாலை 7 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com

# 12. அருள்மிகு சீனிவாசப்பெருமாள் திருக்கோயில், வாலாஜா.



வாலாஜா பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், வாலாஜா ரயில் நிலையத்திலிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தின் மூலவர் சீனிவாசப்பெருமாள் எனவும் தாயார் ஸ்ரீபத்மாவதி தாயார் அமர்ந்த நிலையிலும் உள்ளனர்.



சுற்றுப்பிரகார சன்னதிகளாக பிள்ளையார், அய்யப்பன், சிவபெருமான், பர்வத அம்மாள், முருகன், வனதுர்க்கை, பைரவர், குலதெய்வம், ஸ்ரீராமர் பஜனை மண்டபம், கருடாழ்வார் சன்னதி ஆகியவை உள்ளன.

இத்திருக்கோயிலில் காலை மட்டும் நித்தியப்படி பூஜை நடைபெறுகிறது. புரட்டாசி மாதம் பிரம்மோற்சவம் 10 நாட்கள் உண்டு. 10ம் நாள் வீதி புறப்பாடு ஹம்ஸ வாகனம், சிம்ம வாகனம் மட்டும் உள்ளது. இத்திருக்கோயில் 300 ஆண்டுகளுக்கு முந்தியது ஆகும்.

குழந்தை வரம், திருமணத்தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம், நிவர்த்தி செய்தல், கெடுவிளை தீங்கு நீக்கிக் காத்தல், வியாபார அபிவிருத்தி, போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக இத்திருக்கோயிலில் மேற்கொள்ளப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை
மாலை 7 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : eoarcot@gmail.com





# 13. அருள்மிகு பாப்பாத்தியம்மன் திருக்கோயில், அம்மூர், வாலாஜா வட்டம் வேலூர் மாவட்டம்.



அம்மூர் பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தில் ஊர் காவல் தெய்வமாக பாப்பத்தியம்மன் சுயம்பு வடிவில் அமர்ந்து அருளுகிறாள். சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், துர்க்கை, முருகர், வள்ளி தெய்வானை, நாகர் சன்னதிகள் உள்ளன.





இத்திருக்கோயிலில் ஒரு கால பூஜை நடைபெறுகிறது. குழந்தை வரம், திருமணத் தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி செய்தல், கெடுதல் தீங்கு காத்தல், வியாபார அபிவிருத்தி போன்றவை பக்தர்களின் பிரார்த்தனைகளாக வேண்டிக் கொள்ளப் படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை

மாலை 7 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com





# 14. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில், ஜக் அக்ரகாரம் வீதி, ஆற்காடு வட்டம்



ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், அம்மூர் ரயில் நிலையத்திலிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இத்திருத்தலத்தில் அருள்மிகு வரம்தரும் வரதராஜப் பெருமாள், பெருந்தேவித் தாயார், ஸ்ரீதேவி சன்னதிகள் உள்ளன. இறைவன் திருக்கோலம் கூர்மபீடம் பத்மபீடம் மேல்நின்ற கோலம் ஆகும். சுற்றுப்பிரகாரத்தில் அருள்மிகு பார்த்தசாரதி, லட்சுமணன்



ராமன், சீதை, சக்கரத்தாழ்வார், லக்ஷ்மி நரசிம்மர், ஆண்டாள் சன்னதிகள் உள்ளன. கொடிமரம் உள்ளது. இத்தலம் சப்த ரிஷிகளால் பூஜை செய்யப்பட்ட கோயில். ராஜேந்திர சோழன் கட்டப்பட்டதாகும்.

இத்திருக்கோயிலில் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது. திருவோணம், உத்திரம், அஸ்தம், விசாகம், சுவாதி, புனர்பூசம் , சித்திரை ஆகிய மாத பூஜைகளும், வைகுண்ட ஏகாதசி, புரட்டாசி சனி, பிரம்மோற்சவம் , பவித்ரோற்சவம், பங்குனி உத்திரம், ஆகிய வருட பூஜைகளும் நடக்கின்றன. வாகனங்கள் உள்ளன. இத்திருக்கோயில் 1500 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டது. இராமானுஜர், மணவாள மாமுனி ஆகியோர் தொடர்புடைய கல்வெட்டுகள் உள்ளது.

தமிழ்வருடப்பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, விநாயகர் சதுர்த்தி வருடபூஜைகளும் நடைபெறுகிறது. குழந்தை வரம், திருமணத்தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம், நிவர்த்தி செய்தல், கெடுவினை, தீங்கு காத்தல் , வியாபார அபிவிருத்தி போன்ற பக்தர்களின் பிராத்தனைகளாக மேற்கொள்ளப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை

மாலை 7 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com





# 15. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், குமரகிரி.



வேலூரிலிருந்து, ஆற்காடு – ஆரணி பேருந்து மார்க்க நெடுஞ்சாலையில் திமிரி என்று ஊரிலிருந்து தெற்கே 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. புதுமலர்கள் நறுமணம் பரப்பும் பசுமரங்களால் சூழப்பெற்று, இயற்கை எழில் கொஞ்சும் குமரகிரி என்ற மலையின் உச்சியில் அமைந்துள்ளது. இத்திருத்தலத்திற்கு கண்ணைக் கவரும் வண்ண சிற்பங்களுடன் நுழைவு வாயிலும் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. வருட நாட்களைக் கணக்கிட்டு 365 படிகள் ஏறி இத்திருக்கோயிலை அடைய வேண்டும்.



இத்திருத்தலம் மிகப்பழமையானதும், புராதனச்சிறப்பு மிக்கதும் ஆகும். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் மலையுச்சியில் இக்கோயில் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. இவ்வாலயத்தில் முருகப்பெருமான் வள்ளி – தெய்வானை சமேத சுப்பிரமணியசுவாமியாக எழுந்தருளியுள்ளார்.

யோகீஸ்வர சுவாமிகளால் கருமார வீதியில் வசிக்கும் முனிசாமி ஆச்சாரி என்பவர் இல்லச்சுவரில் கைவைத்த இடத்திலிருந்து முருகன், வள்ளி, தெய்வானை ஆகிய மூன்று உற்சவ சிலைகள் கண்டெடுக்கப்பட்டது. அவை இன்றும் பழைய கடைவீதியில் உள்ள சுப்ரமணியர் கோவிலுள் உள்ளது. திங்கள் தோறும் வரும் கிருத்திகை நாளன்று அந்த உற்சவர்தான் மாடவீதி வழியாக உலா வருகிறார்.

இத்திருக்கோயில் 1968–ம் ஆண்டு திருப்பணி செய்து திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் தலைமையில் குடமுழுக்கு விழா சீரும் சிறப்புமாக நடந்தது. முன்பு ‘கனககிரி’ என்று அழைக்கப்பட்டு வந்த இத்திருக்கோயில் அருள்பாலிக்கும் குமரன் குன்றின்மேல் எழுந்தருளியுள்ளதால், ‘குமரகிரி’ என வாரியார் சுவாமிகள் திருப்பெயர் சூட்டினார். அன்று முதல் இத்திருத்தலம் குமரகிரி என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

ஒவ்வொரு மாதமும் பரணி கிருத்திகை இரு நாட்களிலும் அபிஷேக ஆராதனை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. குறிப்பாக ஆடி தைத்திங்களில் வரும் கிருத்திகை நாட்களிலும் வரும் விழாவும் புரட்டாசி மாதத்தில் பார்வேட்டை உற்சவமும் ஐப்பசி

மாதத்தில் கந்தசஷ்டி விழாவும் கார்த்திகை மாதத்தில் வரும் கார்த்திகை தீப திருவிழாவும், மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com



# 16. அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில், கீழ்மின்னல் கிராமம், இரத்தினகிரி.



இரத்தினகிரி குன்றின்மீது கிழக்கு நோக்கியுள்ளது. இத்திருக்கோயில் 14ம் நூற்றாண்டுக்கு முற்பட்ட திருத்தலமாகும்.

வேலூர் மாவட்டத்தின் தலைநகராகிய வேலூரிலிருந்து சென்னை செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் 13 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. தொடக்கத்தில் சுண்ணாம்பால் கட்டப்பட்ட சிறிய

மூலஸ்தனம் மிகவும் பழுதடைந்த நிலையிலிருந்தது. பழங்கால தமிழ் இலக்கியங்களில் குன்றிருக்கும் இடம் எல்லாம் குமரன் இருக்குமிடம் என்பதற்கு ஏற்ப இத்திருக்கோயில் மலை மீது முருகப்பெருமான் எழுந்தருளி பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகின்றார்.

இத்திருத்தலத்தில் உற்சவர் பாலமுருகன், வள்ளி மற்றும் தெய்வானையுடன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். மலையடிவாரத்தில் நுழைவு வாயிலிலிருந்து உள்ளே வந்தவுடன் இடப்புறத்தில் அருள்மிகு வரசித்தி விநாயகர் கோயில், சிறிது தூரத்தில் மலைக்கு ஏறுவதற்கான 153 படிகள் உள்ளன, பின்னர் இராஜகோபுரமும், அதிலிருந்து 11 படிகள் ஏறினால், மிகப்பெரிய 36 அடி உயரமுள்ள முகப்பு மண்டபம் , முகப்பு மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் அருள்மிகு கற்பக விநாயகர் சன்னதியும், இடப்புறத்தில் உற்சவர் மண்டபமும், உற்சவர் மண்டபத்திலிருந்து 11 படிகள் ஏறினால் பிரகார மண்டபத்தில் அருள்மிகு முருகப்பெருமான் சன்னதியும் அமைந்துள்ளன. மலையடி வாரத்தில் அருள்மிகு துர்க்கையம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது.

இத்திருக்கோயில் அருணாகிரிநாதரால் திருப்புகழில் பாடப்பட்டுள்ள தலமாகும். தினமும் மூன்று கால பூஜைகள் நடைபெறுகிறது. காலை சந்தி 6.00 மணி, உச்சிக்காலம் பகல் 11.00 மணி, சாயராட்சை மாலை 5.30 மணி இதுமட்டுமல்லாமல், வெள்ளிக்கிழமை பூஜை, ஞாயிறு சிறப்பு பூஜை என வார பூஜையும் , பரணி, கிருத்திகை, சஷ்டி மற்றும் பௌர்ணமி பூஜை போன்ற





மாதாந்திர பூஜைகளும் நடைபெறுகின்றன. வருடத்திற்கு ஒருமுறை விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, மகாகந்த சஷ்டி, ஆங்கிலப் புத்தாண்டு, மகர சங்கராந்தி, தவத்திரு பாலமுருகனடிமை சுவாமிகள் மெய்ஞானம் பெற்ற மார்ச்–20, தமிழ் வருடப்பிறப்பு, தைமாதத்தில் திருவிளக்கு பூஜை, ஆடிக்கிருத்திகை, பங்குனி உத்திரப் பால்குடம் போன்ற திருவிழாக்களும் நடைபெறுகின்றன.

இத்திருக்கோயிலில் மாண்புமிகு முதல்வர் அம்மா அவர்களால் துவங்கப்பெற்ற அன்னதானத்திட்டம் 14.01.2006 முதல் தொடங்கப்பெற்று நாள்தோறும் 150 நபர்களுக்கு மதிய உணவு வழங்கப்பட்டு வருகிறது. இதில் நாள்தோறும் பக்தர்கள் பங்கேற்று பயனடைந்து வருகின்றனர்.

**திருக்கோயில் தரிசன நேரம் :**

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 266330

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com





# 17. ஷடாரண்ய ஷேத்திரங்கள் (சிவாலயங்கள்)

பாலாற்றங்கரை இருகரைகளிலும் அகத்தியர், வசிஸ்டர், கௌதமர், பரத்வாஜர், வால்மீகி, அத்திரி, காசிபர் ஆகிய முனிவர்கள் தனித்தனியாக சிவபெருமானை பூஜை செய்து வழிபட்டுவந்தார்கள். மேற்படி 7 திருக்கோயில்களும் ஷடராண்யம் சேத்திரம் என்று கூறப்படுகிறது. மகா சிவராத்தியின்போது 7 திருக்கோயில்களிலும் ஆறுகால பூஜை வெகு சிறப்பாக நடைபெற்று வருகிறது.

ஆதியில் அன்னையை மணம் முடிக்க எண்ணி சிவபெருமான் கைலாய மலையை விட்டு காஞ்சி நகர் வந்தடைந்தார். இறைவன் மண விழாக் காண முனிவர்கள் பலரும் காஞ்சிநகர் நோக்கி வந்தனர். அம்மை அப்பனின் மணவிழா காண முடியாததால் காஞ்சியில் தங்காமல் காஞ்சியை சுற்றியுள்ள காடுகளில் முனிவர்கள் தங்கினர். அப்படி ஆஸ்ரமம் அமைத்து தங்கி வழிபட்ட இடங்கள் வேலூர் மாவட்டம் ஆற்காடு பாலாற்றின் இரு கரைகளிலும் தவத்தில் சிறந்த மாமுனிவர்கள் ஆஸ்ரமம் அமைத்து தவம் இருந்து இறைவனை மணக்கோலத்தில் வழிபட்ட சிவாலயங்களே ஷடாரண்ய ஷேத்திரங்கள் என பெயர் பெற்று அழைக்கப்பட்டு வருகின்றன.



## அ) அருள்மிகு ஸ்ரீகிருபாம்பிகை சமேத கௌதம ஈஸ்வரர் திருக்கோயில், காரை, ராணிப்பேட்டை.



வாலாஜா பஸ் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. அம்மூர் ரயில் நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரத்திலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. ராணிப்பேட்டை முத்துக்கடை பேருந்து நிலையத்திலிருந்து தெற்குப் பக்கம் அமைந்துள்ளது.

சிவபெருமானுடைய ஐந்து முகங்களில் இருந்து ஐந்து ரிஷிகள் தோன்றினர். அவர்கள், பஞ்சரிஷிகள் எனப்படுவர். கவுதமர் பஞ்சரிஷிகளில் ஒருவர், சிவபெருமானிடமிருந்து ஆகம ஞானம் கைவரப்பெற்றவர்.





பாற்படலில் திருமகள் தோன்றினாள் என்பது பலரும் அறிந்த செய்தி. இன்னும் சிலரும் பாற்கடலில் தோன்றினர். அகலிகையும் பாற்கடலில் பிறந்தவளே. இவளை மனைவியாகப் பெற்றவர் கவுதம மகரிஷி.

நீர் நிலைகளில் நீர் எடுக்கும்போது ரிஷி பத்தினிகளுக்கும் அகலிகைக்கும் அடிக்கடிச் சண்டை நேரலாயிற்று. மற்ற ரிஷிகளனைவரும் தம் மனைவியர் பேச்சை கேட்டு ஒன்று சேர்ந்தனர். தம் ஆற்றலால் மாயப் பசுவைக் கவுதமர் விளைவிக்கும் பயிரை மேயுமாறு அனுப்பினர். பசு மேய்வதைப் பார்த்தார் கவுதமர். தருப்பைப் புல்லினை மந்திரித்துப் பசுவின் மேல் எறிந்தார். புல் பட்டுப் பசு இறந்தது. அந்நிலையில் ஒன்று சேர்ந்த மற்ற ரிஷிகள், பசுவைக் கொன்ற பாவம் நீங்க, நீங்கள் அகலிகையுடன் பிரம கிரியை லட்சம் முறை வலம் வர வேண்டும், ஒரு கோடி சிவநாம ஜபம் செய்ய வேண்டும், கங்கையாடி வர வேண்டும் என்று கட்டளையிட்டனர். தவத்திற் சிறந்த மாமுனிவர் மற்ற ரிஷிகள் கூறியபடி பிரம கிரியை வலம் வந்து முடித்த நிலையில் சிவபெருமான் காட்சி தந்தார். “ நீர் கங்கையைத் தேடி செல்ல வேண்டாம், கங்கையே உம்மிடம் வருவாள்” என்றார். தன் சடை முடியில் இருந்து கங்கையை வெளிப்படுத்தினார், அதுவே கோதாவரி. இதனால் இதற்குக் கவுதமி கங்கை என்ற பெயரும் உண்டு.

காரையில் கவுதமர் வழிபட்ட ஆலயம் ஸ்ரீகிருபாம்பிகா சமேத கவுதமீசுவரர் கோயிலாகும். சிவலிங்கமுள்ள கருவறையின் முன்னமையும், அர்த்த மண்டபப் பகுதியில் அம்பிகை திருவுரு



உள்ளது. சுவாமியின் எதிரே கவுதம ரிஷி திருவுருவம். பிரகாரத்தில் வலம் வரும்போது சிறிய ஆனால் பழைய சரபர் திருவுரு உண்டு. இது பைரவர் திருவுருவம் இருக்க வேண்டிய இடத்தில் உள்ளது. விஜய நகர அரசர் காலத்ததாகலாம்.

அம்பிகை அருளின் அடையாளம் கிருபாம்பிகை. அன்னையின் அருளும் சர்வ வல்லமை மிக்க கவுதமர் அருளும் இருந்தால் போதும். சரபர் சன்னிதானத்தில் அமர்ந்து திருவைந்தெழுத்தோத எல்லா வியாதிகளும் விலகும். பிணிகள் போகும் என்பதில் ஐயமில்லை.

### திருக்கோயில் பூஜை நேரம்:

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com

# ஆ) அருள்மிகு அகிலாண்டேஸ்வரி சமேத அகத்தீஸ்வரர் திருக்கோயில், வன்னிவேடு, வாலாஜா வட்டம்.



இத்திருத்தலம் சென்னை – பெங்களூர், பைபாஸ் நெடுஞ்சாலை வாலாஜா நகரத்திலிருந்து, 1 கி.மீ. தொலைவில் உள்ளது. வாலாஜா ரோடு (அம்மூர்) ரயில் நிலையத்திலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

மதுரையில் மீனாட்சி – சுந்தரேஸ்வரர் திருமணம் நடைபெறும் பொழுது தேவர்கள், அசுரர்கள் அனைவரும் திருமண நிகழ்ச்சியில் கலந்து கொள்கின்றனர். அதனால் பூமியின் பாரம் ஒரு பக்கம்



சாய்கிறது. இந்த நிலையில் பூமி சமநிலையை அடைய சிவபெருமான் அகத்திய முனிவரை அனுப்புகிறார். அப்போது அகத்திய முனிவர், சிவபெருமானின் திருமணக்கோலம் காண வேண்டும் என்று வேண்டிக்கொண்டு தெற்கு திசை நோக்கி அகத்தியர் சென்றவுடன் பூமி சமநிலை அடைகிறது. திருமணம் முடிந்ததும் அகத்தியருக்கு திருமணக்கோலத்தோடு சிவபெருமான் காட்சியளிக்கிறார். அகத்தியர் நாடெங்கும் குடில் அமைத்து சிவபெருமானை பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தார்

அகத்திஸ்வரர் திருக்கோயில் கிழக்கு திசை நோக்கி அமைந்துள்ளது. புவனேஸ்வரி அம்மன் தனி சன்னதி உள்ளது. மகாகணபதி, சுப்பிரமணியர் சன்னதிகள் உள்ளது. அஷ்ட திக்கு தேவர்கள், சொர்ண பைரவர், பைரவர், ஹயகீரிவர், ஆஞ்சநேயர், நவகிரகங்கள், 63 நாயன்மார்கள், திருக்கோயில் உட்புறம் அகத்தியர், அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர், சூரியன், சந்திரன் மற்றும் பரிவார தேவதைகள் திருக்கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

செவ்வாய்க் கிழமைகளில் துர்காதேவிக்கு சிறப்பு அபிஷேகம், சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு, ராகுகால பூஜை நடைபெறுகிறது. வியாழக்கிழமைகளில் தட்சிணாமூர்த்திக்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு அர்ச்சனை தீபாரதனையும் நடைபெறுகிறது. ஞாயிறு கிழமைகளில் ராகுகால பூஜை சரபேஸ்வர்க்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு அர்ச்சனை தீபாரதனையும் நடைபெறுகிறது.





தடைப்பட்ட திருமணங்கள் தடையின்றி நடைபெறவும், குழந்தைபேறு கிட்டவும் சகல செல்வங்களும் தந்து நம் வாழ்வை செம்மையாக்க அருள்மிகு புவனேஸ்வரி உடனுறை அருள்மிகு அகத்தீஸ்வரர் சுவாமியை வணங்கி வளமுடன் வாழ்வோம்.

பிரதோஷம், சங்கடஹர சதுர்த்தி, கிருத்திகை ஆகிய நாட்களில் சுவாமிக்கு சிறப்பு அபிஷேகமும், சிறப்பு அலங்காரமும், அர்ச்சனையும், தீபாராதனையும் நடைபெறுகிறது. மகாசிவராத்திரி விழாவும், நவராத்திரி விழாவும், வெகு சிறப்பாக நடைபெறுகிறது. இவை தவிர மாதந்தோறும் பல்வேறு விழாக்கள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் பூஜை நேரம்:**

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை
மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : eoarcot@gmail.com



## இ) அருள்மிகு திரிபுரசுந்தரி சமேத அத்திரியீஸ்வரர் திருக்கோயில், குடிமல்லூர், வாலாஜா வட்டம்.



ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து 9 கி.மீ. தூரத்திலும், ஆற்காடு – சென்னை நெடுஞ்சாலையில் கிழக்கு பக்கமாக அமைந்துள்ளது.

அத்திரி மக ரிஷி பூஜித்த சிவாலயம் வாலாஜாவிலிருந்து சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ளது. பாலாறு நதி கரையோரத்தில் அத்திரிஸ்வரர் பூஜை வழிபாடு செய்யப்பட்டு வணங்கப்பட்டு





வருகிறது. காலம்காலமாக இருந்த லிங்கத்தை கிராம முக்கியஸ்தர்கள் கண்டு திருக்கோயிலை கட்டி மேற்படி லிங்கத்தை அதில் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். பக்த கோடிகள் ஆலயத்தை வழிபட்டு வருகிறார்கள். இத்திருக்கோயில் தீர்த்தம் அருந்த சர்வ வியாதிகள் நிவர்த்தி அடையும், பிரிவினை ஆனவர்கள் ஒன்று சேர்வார்கள் என்று புராணங்களை கிராம பக்த கோடிகள் இதன் சிறப்பை பயன்பெற்று வருகிறது.

மாசி சிவராத்திரியன்று வெகு விமரிசையாக வேண்டுதலுக்காக திருவிழா நடத்தப்படுகிறது.

## திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com



# ஈ) அருள்மிகு வடிவுடையம்மாள் சமேத வால்மீகிஸ்வரர் திருக்கோயில், மேல்விஷாரம், வாலாஜா வட்டம்.



வேலூருக்கும் ஆற்காட்டிற்கும் நடுவில் மேல்விஷாரம் நகராட்சிப்பகுதியில் பாலாற்றிற்கு தென்கரையில் ஆற்று ஓரம் அமைந்துள்ளது.

சர்வ சக்தி தரும் ஷடாரண்ய ஷேத்திரங்களில் முதலாவது தல மேல்விஷாரம்.

ஆண்டுதோறும் மாசி மாதத்தில் வரும் மகா சிவராத்திரியன்று இச்சிவாலயங்களில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் சிவபெருமானை தரிசித்தால் நாம் கயிலாயம் சென்று சிவபெருமானை தரிசித்த பலன்

கிடைக்கும் என்பது தொன்றுதொட்டு இருந்துவரும் ஐதீகம். வால்மீகி முனிவர் சிவபெருமானை இங்கு தவம் இருந்து வழிபட்ட தலமாதலால் இத்தலம் வால்மீகிஸ்வரர் என்று அழைக்கப்பட்டது.

இத்தலத்தில் பங்குனி மாத உத்திரத் திருநாளில் அருள்மிகு வால்மீகிஸ்வரர், அருள்மிகு வடிவுடையாம்பாள் சுவாமிகளுக்கு திருக்கல்யாண வைபவம் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

ஒவ்வொரு ஆடி மாதமும் ஸ்வர்ண கௌரி, ஐஸ்வரிய ஈஸ்வரர் பூஜை மிகச் சிறப்பபாக நடைபெற்று வருகிறது. கௌரி என்றால் தங்க நிறம் உடையவள் என்று பொருள். தங்கத்தினையும் எல்லா வகையான ஐஸ்வர்யத்தையும் அளிப்பதனால் சம்பத்கௌரி என்றும் போற்றப்படும் அம்பாள் மேலும் மகாலட்சுமிக்கும் குபேரனுக்கும் சங்க நிதி, பத்ம நிதி அஷ்ட மங்களங்கள் அளித்த ஐஸ்வர்ய ஈஸ்வரர் பூஜை மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.





## திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : eoarcot@gmail.com

## உ) அருள்மிகு பாலகுஜாம்பிகை சமேத வசிஸ்டேஸ்வரர் திருக்கோயில், வேப்பூர், வாலாஜா வட்டம்.

ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து 6 கி.மீ. தூரத்திலும், ஆற்காடு – வேலூர் சாலையில் பாலாற்றிற்கு தென் கரையில் ஆற்று ஓரம் அமைந்துள்ளது.

கி.பி.1106–ம் ஆண்டு குலோத்துங்க சோழனால் பங்குனி உத்திரம் அன்று மானியம் அளிக்கப்பட்டது. கி.பி. 1427–ம் ஆண்டு





பாலாற்ற வெள்ளத்தால் சிதைந்து போகும் அபாயம் இருந்ததால் அப்போதைய மன்னரால் கரையோரம் தடுப்பு சுவர் கட்டப்பட்டுள்ளதை இப்போதும் காணலாம். 108 கால் மண்டபம் உள்ளது. திருமண திருத்தலம். தமிழ் வருடத்திற்கு அன்று வழிபட்டால் ஓராண்டிற்கு வழிப்பட்ட பலன் உண்டு.

வசிஸ்ட முனிவர் தவமிருந்து சிவனை வழிபட்ட ஸ்தலம் அருணகிரி நாதரால் பாடல்பெற்ற ஸ்தலம்.

### திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை
மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : eoarcot@gmail.com





# ஊ) அருள்மிகு தர்மசம்வர்த்தினி சமேத பரத்வாஜீஸ்வரர் திருக்கோயில், புதுப்பாடி, வாலாஜா வட்டம்.





ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து 6 கி.மீ. தூரத்திலும், ஆற்காடு – செய்யாறு சாலையில் பாலாற்றிற்கு தென் கரையில் ஆற்று ஓரம் அமைந்துள்ளது.

கி.பி.1720–ல் பல்லவர்களால் கட்டப்பட்ட திருக்கோயிலாகும். மாமரங்களால் சூழப்பட்ட வனம் (சுதவனம்) பரத்வாஜ முனிவரால் பூஜிக்கப்பட்டதால் பரத்வாஜீஸ்வரர் எனும் திருக்கோயிலாக



மாறியது. ஸ்ரீராமர் பாதம் உள்ளது. பரத்வாஜீஸ்வரர் முனிவர் பிம்பம் உள்ளது. சுவாமி மூலவர் விமானம் அமைந்து உள்ளது.

## திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை
மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : eoarcot@gmail.com





# எ) அருள்மிகு ஸ்ரீபர்வதவர்த்தினி சமேத காச்யபேஸ்வரர் திருக்கோயில், அவரக்காடு, வாலாஜா வட்டம்.



ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து 10 கி.மீ. தூரத்திலும், பாலாற்றிற்கு வடகரையில் ஆற்று ஓரம் அமைந்துள்ளது.

கச்சபேஸ்வரர் எனும் முனிவர் சிவனை இவ்விடத்திலிருந்து மிக அதிகமாக தவமிருந்து பகவான் காட்சியளித்ததின் பேரில் இத்திருத்தலம் சிறப்பு வாய்ந்தது. பாலாற்றின் வடகரையில் இருக்கும் இத்திருக்கோயிலுக்கு வேண்டுதலும் பிராத்தனையும், நினைத்தப்படி நடப்பதாக ஆன்றோர்கள் தெரிவித்தார்கள்.

## திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை
மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : eoarcot@gmail.com



# 18. கோட்டை ஜலகண்டேசுவரர் திருக்கோயில், வேலூர்



இத்திருக்கோயில் வேலூர் நகரிலுள்ள வேலூர் கோட்டையின் ஒரு பகுதியில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. இக்கோட்டையும், இக்கோட்டை பகுதியிலுள்ள கோயிலும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளவை.

கி.பி 9ம் நூற்றாண்டில் சோழ பேரரசு பரகேசரிவர்மன் விசயாலாயன் தலைமையில் தோன்றி வளர்ச்சியுற்றது. அம்மன்னன் மகன் பராந்தகன் பரகேசரி வேலூரைச் சுற்றியுள்ள பகுதியைத் தமது ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தான். பிற்காலத்தில் தொண்டை நாட்டை கைக்கொண்ட ஆட்சியாளர்களிடம் வேலூர் கோட்டை





இருந்து வந்தது. வேலூரின் குறிப்பிடத்தக்க வளர்ச்சி விஜயநகரமன்னர் காலத்தில் தோன்றிற்று.

விஜயநகர மன்னன் தமிழ் மண்டலத்திற்கு சந்திரகிரியைத் தலைநகராக்கி அதன் பொறுப்பைத் தம் கடைசி மகன் வேங்கடபதியிடம் ஒப்புவித்தார். இவ்வேங்கடபதி மன்னர் விஜயநகர ஆட்சியை நிலைப்படுத்த பல முயற்சிகள் மேற்கொண்டார். சந்திரகிரியைத் தலைநகராக கொண்டிருந்த இவர் வேலூரை இரண்டாம் தலைநகராக மாற்றினான். வேலூர் கோட்டையை அமைத்தான். சூரியகுண்டம் என்னும் குளத்துநீர் இக்கோட்டையின் அகழிக்கு பாய்ந்தது. வேங்கடபதி மன்னர் வேலூர் மன்னர் எனப் புகழப்பெற்றார். அவர் காலத்தில் வேலூர் கோட்டைப் பகுதியில் ஜலகண்டேசுவரர் கோயில் அமைக்கப்பட்டது. இவர் காலத்தில் பொம்ம நாயக்கர் என்னும் சிற்றரசர் இருந்தார் என்பதை ஜம்பைக் கல்வெட்டுத்தெரிவிக்கிறது. இவரே ஜலகண்டேசுவரர் கோயிலை நிறுவியவர். நுழைவாயிலில் பொம்மநாயக்கர் தம் துணைவியுடன் சிற்பவடிவில் காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

இத்திருக்கோயிலின் கிழக்கு கோபுர வாயிலுக்கு நேர் மேற்கில் ஒரு வாயில் கிழக்கு நோக்கியவாறு இருக்கின்றது. இதில் நுழைந்தால், கிழக்கு பிராகாரத்தில் உள்ள விநாயகர் சந்நிதியை அடையலாம். இதற்கு வடக்கில் சப்தமாதர் திருவுருவங்கள், அறுபத்துமூவர் திருவுருவங்கள், வீரபத்திரர் திருவுருவம் தெற்கு நோக்கியுள்ளன. தெற்கு பிரகாரத்தில் அருள்மிகு விநாயகர் சந்நிதி, அடுத்து அருள்மிகு சீனிவாசப்பெருமாள், சண்முகர், ஆகியவை உள்ளன. தென்மேற்கு கோடியில் அருள்மிகு இலட்சுமி, அருள்மிகு



சரசுவதி ஆகியோர்களுக்கு தனித்தனி சந்நிதிகள் உள்ளன. இவை வடக்கு நோக்கியுள்ளன. மேற்குபிராகாரத்தில் அருள்மிகு அகிலாண்டேசுவரி சந்நிதி வடக்கு நோக்கியுள்ளது. இதற்கு எதிரில் நவசக்தி தீபம் உள்ளது. 9 அகண்டத்தில் தீபம் எரிந்து கொண்டேயிருக்கிறது. வடக்கு பிராகாரத்தில் பைரவர் சந்நிதியும் இதனையடுத்துச் சனீசுவரர் சந்நிதியும் தெற்கு நோக்கியுள்ளன.

கோட்டையின் மையமான வரலாற்று சிறப்புமிக்க திருக்கோயில் இதுவாகும்.

இத்திருக்கோயில் ஏழுநிலைகள் கொண்ட கோபுரம் ஒன்பது கலசங்களுடன் 30 மீட்டர் உயரத்தில் உள்ளது.

மூன்றாம் பிராகாரத்தின் நாற்புறங்களிலும் மண்டபங்களுடன் மேடைகள் உள்ளன. இரண்டாம் பிராகாரம் திறந்த வெளியாக உள்ளது.

கருவறைப்பகுதியில் கிழக்கு நோக்கிய வாயிலின் வழியாகக் கோயிலின் கருவறையை வலம்வரும்போது கிழக்கிலுள்ள முதற்பிராகாரத்தில் உற்சவர்கள் சந்நிதியைக் காணலாம். கருவறை கோஷ்டச் சுவர்களில் தெற்கில் விநாயகரும், தட்சிணாமூர்த்தி திருவுருவமும் மேற்கில் திருமால் திருவுருவமும் வடக்கு பிராகாரத்தில் பிரம்மதேவர் , துர்க்கை ஆகியோர் திருவுருவங்களும் உள்ளன. வடக்குப் பிரகாரத்தில் அருள்மிகு சண்டேசுவரர் சந்நிதி தெற்கு நோக்கியுள்ளது. கருவறையின் முன்பகுதியின் வடபுறத்தில் நடராசர் சந்நிதி தெற்கு நோக்கியுள்ளது. இத்திருக்கோயில் அழகிய சிற்பக்களஞ்சியமாக ஆகும். கோபுரத்தின் முன்பக்கம் மிக எடுப்பாக இருப்பது போன்று ஏனைய பக்கங்களும் அழகிய முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளன. துவாரகபாலகர்கள் சூலமும் பாசமும்







கைகளில் ஏந்தி, கதையுதவியால் காலையூன்றி ஒருபுறம் அழகுறச் சாய்ந்து நிற்கும் நிலை கண்களைக் கவரும்.

இத்திருக்கோயில் கருவறையில் சிவலிங்க மூர்த்தம் இல்லாமல் இருந்தது. தேதியில் லிங்கப் பிரதிஷ்டை செய்யப்பட்டு தொடர்ந்து வழிபாட்டில் உள்ளது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 12 மணி வரை

மாலை 4 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2223412

இணையதளம் : www.velloreonline.com



# 19. அருள்மிகு செல்வவிநாயகர் திருக்கோயில், சேண்பாக்கம்.



இத்திருக்கோயில் வேலூருக்கு மேற்கில் 2 கி.மீ. தொலைவில் பெங்களூர் நெடுஞ்சாலையில் சேண்பாக்கம் கிராமத்தில் அமைந்துள்ளது. தமிழ்நாட்டில் எத்தனையோ விதமான தலங்கள் உள்ளன. அத்தலங்களில் ஒன்றாக சுயம்பு விநாயகராக இருந்து அருளும் மிகப்பிரசித்தி பெற்ற பிரார்த்தனை தலமாக விளங்குகிறது.

வேலூர் பகுதியை துக்கோஜிராவ் என்ற மராட்டிய மன்னன் ஆண்டுவந்தான், அவன் ஆட்சி செய்த காலம் கி.பி. 1677 ஆகும்.





இவர் காலத்தில் தான் இத்திருக்கோயில் கட்டப்பட்டது . இதன்மூலம் இத்திருக்கோயிலின் தொன்மை 17ம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்று அறியப்படுகிறது.

ஆதியில் செண்பக வனமாக இருந்தது அது பின்னர் 'சேண்பாக்கம்' என்று மருவி அழைக்கப்படுகிறது. மேலும் ஒரு காலத்தில் பாலாற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஒடியப்போது அங்கு குடியிருந்த மக்கள் மேடான பகுதியாக அமைந்திருக்கும் செல்வவிநாயகர் ஆலயம் அருகில் குடிபுகுந்தனர் என்றும், சுயம்புவாக விநாயகர் அமர்ந்த இடம் என்பதால் ஸ்வயம்பாக்கம் என்று அவ்விடத்திற்கு பெயரிட்டனர் என்றும் காலப்போக்கில் அது மருவி சேண்பாக்கம் என்றும் அழைக்கப்படுவதாகவும் கூறுவர். இத்திருக்கோயில் இறைவனின் திருக்கோலம் சுயம்பு மூர்த்தங்களாக 11 உருவங்களில் உள்ளது தவிர அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர், அருள்மிகு விஷ்ணு, அருள்மிகு காசி விஸ்வநாதர் சன்னதி, அருள்மிகு தட்சணாமூர்த்தி, அருள்மிகு சுப்ரமணியர் வள்ளி தெய்வானை, அருள்மிகு சனீஸ்வரர் சன்னதிகள் திருக்கோயிலின் நுழைவாயிலிருந்து இடப்புறத்திலிருந்து வலப்புறமாகவும் உள்ளது.

மூலவரின் எதிரில் கோயில் உள்ளேயே கொடிமரம் மற்றும் பலிபீடம் அமைந்துள்ளது. திருக்குளம் திருக்கோயிலுக்கு எதிரிலுள்ளது. தினமும் நான்கு கால பூஜைகள் நடைபெறுகிறது.

மாதந்தோறும் சங்கடஹர சதுர்த்தி நாளில் ஸ்ரீசெல்வ விநாயகருக்கு சிறப்பு அபிஷேகம் செய்யப்படுகிறது.



வருடந்தோறும் செல்வவிநாயகருக்கு விநாயகர் சதுர்த்தி அன்று தொடங்கி 10 நாட்கள் விநாயக சதுர்த்திப்பெருவிழா நடைபெற்று வருகிறது. சித்திரை மாதம், சித்ரா பௌர்ணமி அன்று பூப்பல்லக்கு உற்சவமும் ஆடிமாதத்தில் 5வது வெள்ளிக் கிழமைகளில் லட்சதீப திருவிழாவும், புரட்டாசி மாதத்தில் சங்கடஹர சதுர்த்தியில் பவித்ரோத்சவமும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

திருமணம் தடைப்பட்டவர்கள், மகா சங்கடஹர சதுர்த்தி விரதமிருந்து தீபம் ஏற்றி விநாயகப்பெருமானை வணங்கி, ஆதிசங்கரால், சக்கர ஸ்தாபனம் செய்த இடத்தில் உள்ள நவக்கிரகங்களை வழிபாடுசெய்தால் திருமணம் விரைவில் கைக்கூடும்.

இங்குள்ள பாலவிநாயகருக்கு பால் அபிஷேகம் செய்து கொண்டு குழந்தை வரம் வேண்டுதல் செய்வதும், குழந்தைகள் உடல்நலக் குறைவு ஏற்பட்டால் வேண்டினால் வேண்டியது கிடைக்கும். கல்வி, வேலை, குழந்தை பாக்கியம், திருமண தடை நிவர்த்தி குடும்ப பிரார்த்தனைகள் ஆகியவை பக்தர்கள் மேற்கொள்ளும் பிராத்தனைகளாக உள்ளன.

இத்திருத்தலத்தில் விநாயகர் சுயம்புவாக ஓம் என்னும் ப்ரணவ சொரூபமாக எழுந்தருளி அருள் பாலித்து வருகிறார். மூலவரான ஸ்ரீ செல்வ விநாயகர் முதுகில் வலது பக்கத்தில் சாரட் வண்டியின் சக்கரம் ஏறிய வடு அமைந்துள்ளது. ஆதிசங்கரர் பூஜித்த தலம், விண்ணில் உலாவும் தேவர்கள், ரிஷிகள் அனைவரும் வந்து பூஜித்து வணங்குவதற்கு ஏற்றவகையில் மேற்கூரை அற்றநிலையில்



கோயில் அமைக்கப்பட்டுள்ளது. மற்ற கோயில்களை போன்று இல்லாமல் இத்திருக்கோயிலில் மூலவர் சன்னதியிலேயே கொடி மரம் அமைக்கப்பட்டுள்ளது. நவக்கிரகங்களின் அருகில் ஆதிசங்கரால் சக்கரஸ்தாபனம் செய்யப்பட்டுள்ளது. நவகிரகங்களில் எழுந்தருளியுள்ள சனிஸ்வர பகவான் மூலவரை பார்த்தபடி இருப்பது சிறப்பு வாய்ந்த ஒன்றாகும்.

### திருக்கோயில் தரிசன நேரம்:

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2222901

மின்னஞ்சல் : eoreddichatram@gmail.com



# 20. அருள்மிகு செல்லியம்மன் திருக்கோயில், வேலூர்

வேலூர், பாலாற்றின்கரையில் குடிகொண்டு தன்னை நாடிவரும் மக்களின் குறைகளை தீர்த்து நலம் காத்து வேலூர் நகரின் எல்லை தெய்வமாக செல்லியம்மன் என்ற பெயரோடு





அருள்பாலித்து வருகிறாள். உலகாளும் நாயகியும் செழிப்பான வாழ்வளிப்பவளுமான வேலூர், தோட்டப்பாளையம் கிராம மக்களின் எல்லையம்மனாகிய அருள்மிகு செல்லியம்மன் திருக்கோயில் வேலூர், மாநகருள் பேருந்துகள் நுழையுமிடத்தில், நுழைவு வாயில் தென் பகுதியில் அமைந்துள்ளது.

வேலூர் மாநகரிலுள்ள அருள்மிகு ஜலகண்டேஸ்வரர், அருள்மிகு தாரகேசுவரர் மற்றும் முக்கிய திருக்கோயில்களின் பிரம்மோற்சவ விழாக்களின்போதும், இதர முக்கிய திருவிழாக்களின்போதும், செல்லியம்மனுக்கு முதல் பூஜை செய்தபின்புதான் அனைத்து நிகழ்ச்சிகளும் தொடங்குவது மரபாக உள்ளது.

ஒரு சமயம் ஊருக்குள் நுழைந்த கொள்ளையர்களை திம்மி, பொம்மி என்னும் இரண்டு பெண்கள் சாமுண்டீஸ்வரியின் சக்தி பெற்று அடித்து உதைத்து ஊரைவிட்டே துரத்தினர். இதன்மூலம் அம்மனின் மகிமையை உணர்ந்த மக்கள், அன்னையை செல்லமான அம்மன் என்னும் பொருளில் செல்லியம்மன் என்று பெயர் சூட்டி வணங்கத் தொடங்கினர். இன்று வரை தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு கேட்டதை அள்ளிதரும் வரப்பிரசாதியாக திகழ்கிறாள் செல்லியம்மன் கருவறையில் பிராம்மி, மாகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி என்கிற செல்லியம்மன் ஆகிய சப்த மாதாக்கள் வீற்றிருக்கின்றனர். இவர்களில் பிரதானமாக தீசுவாலை கீரிடத்துடன் 4 கைகளில் டமருகம், சூலம், பாசம், கபாலம், ஏந்தி சுகாசனத்தில் கிழக்கு



நோக்கி இன்முகமாக வீற்றிருக்கிறாள். வலப்பக்கம் விநாயகரும், இடப்பக்கம் வீரபத்ரரும் அருள்பாலித்து வருகின்றனர்.

வேலூர் கிராம தேவதை திருக்கோயிலின் தலவிருட்சமாக ஏதாவது ஒன்று மட்டுமே இருக்கும் ஆனால் இத்திருக்கோயிலின் தலவிருட்சமாக மூங்கில், அத்தி, வேம்பு ஆகிய மூன்றும் இருப்பது இத்திருக்கோயிலின் சிறப்பாகும்.

1008 விளக்கு பூஜை, ஆடிமாதம் மூன்றாம் வெள்ளிகிழமை, நவராத்திரி விழா அன்று செல்லியம்மன் ஊஞ்சல் சேவை நடைபெறுவது சிறப்பாகும். கார்த்திகை மாதத்தில் 1008 விளக்குகளால் தீபம் ஏற்றி அலங்கரித்து வழிபடுவது சிறப்பானதாகும்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 05.30 மணி முதல் நண்பகல் 12.00 மணி

மாலை 03.30 மணி முதல் இரவு 8.00 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2222375

மின்னஞ்சல் : eotharageswarar@gmail.com





# 21. அருள்மிகு சோலாபுரியம்மன் திருக்கோயில், வேலூர்.

இத்திருக்கோயில் வேலூர் நகரில், கொசப்பேட்டை எனும் இடத்தில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் தல விருட்சம் மகிழ மரமாகும். வேலூர் பஸ்நிலையத்திலிருந்து 2 கி.மீ. தூரமும், வேலூர், இரயில் நிலையத்திலிருந்து அரை கிலோமீட்டர் தூரத்திலும் அமைந்துள்ளது.



வேலூரிலிருந்து வடஇந்தியாவிலுள்ள சோலாப்பூருக்கு படைப்பணி ஆற்ற சென்ற ஒருவர் அங்கு கோயில் கொண்டிருந்த அம்மனிடம் மனத்தை பறிகொடுத்தார். இவர் தமது சொந்த ஊராகிய வேலூரில் சோலாப்பூர் அம்மனின் இக்கோயிலைக் கட்டினார். இதுவே இன்று வேலூர் குயப்பேட்டையில் சோலாபுரியம்மன் கோயில் என்று விளங்கி வருகிறது. காரண ஆகம பூஜை நடைபெறுகிறது.

அம்மை , வயிற்று வலி, கண்நோய், போன்ற நோய்கள் நீக்கம் பெற மக்கள் இங்கு பிரார்த்தனை செய்து நலம் பெறுகிறார்கள்.

இக்கோயில் ஒரு பிரார்த்தனைத் தலமாக விளங்கிவருகிறது. இத்திருக்கோயிலில் தெலுங்கு ஆண்டுப் பிறப்பு, தமிழ் ஆண்டுப்பிறப்பு, ஆடி வெள்ளி கிழமைகள், நவராத்திரி, கார்த்திகை தீபம், தனுர்மாத பூஜை ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : **0416 – 2212761**
மின்னஞ்சல் : eo1rangapuram@gmail.com





# 22. அருள்மிகு வேம்புலியம்மன் திருக்கோயில், வேலூர்.



வேலூர் நகரில் லாங்குபஜாரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் தல விருட்சம் வேப்ப மரமாகும். கருவறையில் வேம்புலியம்மன் வேப்ப மரத்தின் கீழ் இருந்து அருள்புரிகிறாள். வேலூர் பஸ்நிலையத்திலிருந்து அரை கிலோமீட்டர் தூரமும், இரயில் நிலையத்திலிருந்து 3 கிலோ மீட்டர் தூரமும் அமைந்துள்ளது.



இத்திருக்கோயில் ஒரு பிரார்த்தனைத்தலமாகும். திருமண தடைகள், அம்மை, வயிற்றுவலி போன்ற நோய் நீங்க மக்கள் இங்கு பிராத்தனை செய்து நலமடைகிறார்கள்.

இத்திருக்கோயிலில் காரண ஆகம பூஜை நடைபெறுகிறது. ஒரு காலபூசையை பண்டாரம் செய்து வருகிறார். ஆடிவெள்ளி , நவராத்திரி, தமிழ் ஆண்டுப்பிறப்பு தனுர் மாதம் போன்ற நாட்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2212761

மின்னஞ்சல் : eo1rangapuram@gmail.com

# 23. ஸ்ரீபுரம் பொற்கோவில், திருமலைக்கோடி



வேலூர் பஸ்நிலையத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவிலும், காட்பாடி ரெயில் நிலையத்திலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

ஸ்ரீபுரம் பொற்கோவில் வேலூர் அருகே திருமலைக்கோடி எனும் ஸ்ரீபுரத்தில் அமைந்துள்ளது. ஸ்ரீலக்ஷ்மி நாராயணியம்மன் பொற்கோயிலில் குடிகொண்டு தெய்வமாகி அருளுகிறாள்.

இக்கோயில் முழுவதும் தங்க முலாம் தகடுகளால் வேயப்பட்டுள்ளது. இக்கோயில் 100 ஏக்கர் பரப்பளவுள்ள அழகிய பூஞ்சோலையில் ஸ்ரீசக்கர வடிவ சுற்று பிரகார மண்டபத்திற்கு நடுவில் அமைக்கப்பட்டுள்ளது.





தங்கக் கோயிலை சுற்றியுள்ள அலங்கார வளைவுகள், மண்டபங்கள், முகப்புகள் ஆகியவை இரவு நேரத்தில் கண்ணை கவரும் வகையில் நவீன விளக்கு ஒளியில் பிரகாசிப்பது இதன் சிறப்பாகும்.

தற்போது ஸ்ரீலக்ஷ்மி நாராயணி அம்மனுக்கு மட்டும் சந்நிதி உள்ளது. திருமாலுக்கு என தனி கற்கோயில் உருவாக்கப்பட்டு வருகின்றது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2206500

இணையதளம் : www.sripuram.org

# 24. அருள்மிகு வீர ஆஞ்சநேயர் சுவாமி திருக்கோயில், கொணவட்டம்.

வேலூர் வட்டம், கொணவட்டம், வேலூர் – பெங்களூர் நெடுஞ்சாலையின் மையப்பகுதியில் வேலூரிலிருந்து 4–வது கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பு கொணவட்டத்தை சார்ந்த முஸ்லீம் பிரமுகர் ஒருவர் அந்த



சாலையில் ஒரு குரங்கினை தவறுதலாக கம்பால் அடித்து இறந்து விட்டதை அப்படியே விட்டு சென்றுள்ளார்.

அந்த முஸ்லீம் பிரமுகர் செல்வந்தராக இருந்து இந்த நிகழ்ச்சிக்கு பிறகு குடும்பத்துடன் சிரமப்பட்டதாகவும், அவர் மகன் இறந்து விட்டதாகவும், ஒரு இந்து பக்தரிடம் கூறியுள்ளார். அந்த இந்து பக்தர் முஸ்லீம் பிரமுகரிடம் சிறிய கோயில் கட்டினால் அல்லல்கள் நீங்குமெனக் கூறியதால் அவர் கூறியபடி அந்த குரங்கு இறந்த இடத்தில் ஒரு சின்ன ஆஞ்சநேயர் சிலையை பிரதிஷ்டை செய்தார். முஸ்லீம் நண்பர் சின்ன ஆஞ்சநேயர் சிலையை பிரதிஷ்டை செய்த பின்னர் பொது மக்களாலும், பக்த பிரமுகர்களாலும் வணங்கப்பட்டு நாளடைவில் பெரிய கோயிலாக சாலையின் மையப்பகுதியில் அமைந்து விட்டது. பக்தர்கள் இந்த வீர ஆஞ்சநேயரை தரிசனம் செய்தால் பில்லி, சூனியம் போன்றவை







நீங்குவதாகவும், செல்வம், செழிப்பும் வேண்டுபவர்க்கு வேண்டும் வரம் அளிப்பதாகவும் வீர ஆஞ்சநேயரை வணங்கிவருகிறார்கள்.

இந்த வீர ஆஞ்சநேயரின் வாலில் சலங்கை மணி உள்ளது. மேலும் செந்தூரம், வெண்ணெய் கலந்த நவநீத செந்தூரமும் பிரசாதமாகவும், துளசி தீர்த்தமும் வழங்கப்பட்டு வருகிறது.

இத்திருக்கோயில் முருகன் சன்னதி, நவக்கிரக சன்னதிகளும் உள்ளது. இத்திருக்கோயில் ஆண்டு விழாவாக தனுர் மாத பூஜையும், ஸ்ரீஅனுமன் ஜெயந்தி, கார்த்திகை தீபம், ஆடிக்கிருத்திகை போன்ற விழாக்கள் சிறப்பாக நடந்து வருகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 266330

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com



# 25. அருள்மிகு பொற்கொடியம்மன் திருக்கோயில், வல்லண்டராமம்.



பொன் போன்ற நிறத்துடன் கூடிய கொடி போன்ற உருவம் உடையவள் என்னும் பொருளில் பொற்கொடியம்மன் என்னும் பெயர் அமைந்துள்ளது. இக்கோயிலின் தலவிருட்சமாக வேப்பமரம் உள்ளது.

இத்திருக்கோயில் சென்னை – பெங்களூர் தேசிய நெடுஞ்சாலை வல்லண்டராம கூட்டு ரோடு மையத்திலுள்ளது.

திருவிரிஞ்சிபுரம் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து வல்லண்டராமம் என்னும் ஊரில் அமைந்துள்ளது.

இத்திருக்கோயில் சித்திரை மாதம் கடைசி செவ்வாய்கிழமை இரவு அம்மன் சிரசு ஏற்றப்பட்டு திருவீதி உலா நடைபெற்று மறுநாள் புஷ்பரத ஏரியில் திருவிழா நடைபெறுகிறது. இத்திருவிழாவில் தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களில் இருந்தும் கர்நாடக மாநிலத்தில் பல்வேறு இடங்களில் இருந்தும் பெருமளவில் தம் மனக்குறைகளை போக்க வேண்டி, நிவர்த்தி பெற்று அதன் நேர்த்திக்கடனை செலுத்த வந்து வழிபடும் பக்தர்கள் அதிகம் கூடும் திருத்தலமாகும்.

பச்சை ஒலையில் வேய்ந்த மாட்டுவண்டிகளிலும், இரண்டு சக்கர, நான்கு சக்கர வாகனங்கள்மூலம் தன் குடும்பத்துடன் வந்து அம்மனை வழிபட்டு செல்கின்ற வழக்கத்தினைக் கொண்டுள்ளனர். மணமாகாத பெண்கள் மணம் கொள்ளவும், பிணியுற்றோர் பிணி அகலவும், துயர் உற்றோர் அவர்தம் துயர் துடைக்கவும் வேண்டிக்கொண்டு பலன் பெற்றுச் செல்லும் திருத்தலமாகும்.

இத்திருக்கோயிலின் கருவறைமீது விமானம் உள்ளது. மகாமண்டபம் ஒன்றும் உள்ளது. இக்கோயிலில் ஒரு காலபூசை நடைபெறுகிறது. சித்திரை மாதம் கடைசி புதன்கிழமை நாளில் பெரிய திருவிழா நடைபெறுகிறது. அதுசமயம் ஆண்களும், பெண்களும் பிரார்த்தனை செய்ய சித்தேரி என்னும் பெரிய ஏரியில் கூடி வணங்கி நலன் பெற்று செல்வது வழக்கம். இத்திருவிழாவிற்கு புஷ்பரதத் திருவிழா என்று பெயர்.





கால்நடைகளின் பிணிதீர்க்கும் முக்கிய தலமாகவும் விளங்குகிறது. சித்திரை மாதம் நடைபெறும் திருவிழாவில் மாவட்டத்தின் பிற ஊர்களிலிருந்து பல்லாயிரக்கணக்கான கால்நடைகள் கொண்டுவந்து திருக்கோயிலை கால்நடைகளுடன் வலம் வந்து வணங்கி விட்டு செல்கின்றனர்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172–252295

மின்னஞ்சல் : porkodiamman@gmail.com





# 26. அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரர் திருக்கோயில், விரிஞ்சிபுரம்



பாலாற்றின் தென் கரையில் வேலூரிலிருந்து ஆம்பூர் செல்லும் சாலையில், ‘‘செதுவாலை’’ என்ற இடத்திலிருந்து வலப்புறம் பிரிந்து செல்லும் சாலையில் 1 கி.மீ. சென்று இத்தலத்தை அடையலாம். வேலூரிலிருந்து 12 கி.மீ. தொலைவிலிருந்து, விரிஞ்சிபுரம் மார்க்கசகாயர் கோயிலின் எழில்மிகு இராஜகோபுரம், நம்மை எதிர்கொண்டழைக்கும் – பகலவனின் ஒளிக்கதிர்கள், பங்குனி மாதத்தில், கருவறை வரை சென்று, வழித்துணை நாதரைத் தழுவுவதால், ‘‘பாஸ்கரத்தலம்’’ என்றும் இதற்கு பெயர்.



எட்டுத்திக்கிலும் மண்டபங்கள், மதிலைச் சுற்றி நான்குபுறமும் தேரோடும் வீதிகள், என்று நகர அமைப்புக் கலையின் இலக்கணங்கள் அத்தனையும் கொண்ட தலம் விரிஞ்சிபுரம். கிழக்கு நோக்கிய இராஜகோபுரம் 110 அடி உயரமும், ஏழுநிலைகளும், ஒன்பது கலசங்களும் கொண்டு கம்பீரமாகத் திகழ்கிறது. வெளிமதில் வரை ஐந்து பிரகாரங்கள் உள்ளன. வெளிமதில் பிரகாரத்தில், பிரம்ம தேவன் உருவாக்கிய பிரம்ம தீர்த்தம் உள்ளது.

திருக்கோயில் பிரகாரத்தில், இரண்டு பிரசித்தி பெற்ற மண்டபங்கள் உள்ளன. தென்பகுதியில் உள்ளது கல்யாண மண்டபம், அழகிய சிற்பங்களையும், தலவரலாற்றின் புடைப்பு சிற்பங்களையும் கொண்டது. வடபகுதியில் உள்ளது வசந்த மண்டபம். ராஜ கோபுரத்தை கடந்து உள்ளே நுழைந்ததும், நம்மைக் கவர்வது கம்பீரமான சிம்மக்குளம்.

விரிஞ்சிபுரம் திருத்தலத்தில் அமைந்துள்ள "சிம்மதீர்த்தம்", முற்றிலும் வித்தியாசமானது. இந்தப் புனிதக் குளத்தில் நீராடிடும் பெண்கள் "மழலைச் செல்வத்தை" பெறுவது காலங்காலமாக இப்பகுதி மக்களிடையே உள்ள அசையா நம்பிக்கை.

### "சிம்மக்குள நீராடல்" – சிறப்பு

"கௌரி தீர்த்தம்" என்றும் பெருமை கொண்ட விரிஞ்சிபுரம் சிம்மக்குளத்தின் சிறப்புகள் பல.



விரிஞ்சிபுரம் அருள்மிகு வழித்துணைநாதர் திருக்கோயிலில் அமைந்திருக்கும் சிம்மக்குளத்தில் நீராட கார்த்திகை கடைசி ஞாயிறு அன்று, “மகளிர் மட்டும்” அனுமதி அளிக்கப்படுகின்றனர். இன்றும் தம்மைப் பிடித்துள்ள தீக்காற்று நீக்கமடையவும், மழலைவரம் வேண்டியும், சிம்மக்குளத்தில் நீராடிடும் பெண்கள், ஈரத்துணியுடனேயே, ஆலயத்தின் மண்டபத்தில் படுத்துறங்குவதும், “நற்சொப்பனம்” கண்டு, விரையில் கருத்தரிக்கும் பாக்கியம் பெறுவதும், மக்களின் கூற்றாக உள்ளது. “சிம்மக் குளத்தில் நீராடி சீக்கிரம் ஒரு குழந்தையை பெற்றுக்கொள்!” என்று இவ்வட்டாரப் பெரியோர்கள் பெண்களை வாழ்த்துவர்.





இத்திருக்கோயில் வேலூர் – பெங்களூர் நெடுஞ்சாலையில் வேலூரிலிருந்து 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. விரிஞ்சன் எனும் சொல் பிரம்மதேவனை குறிக்கும் பிரம்மதேவர் இத்தலத்தின் அருச்சகருக்கு மகனாக அவதரித்து சுவாமியை பூஜை செய்து வழிபட்டதால், விரிஞ்சிபுரம் என்னும் பெயர் வழங்கி வருகிறது.

இறைவன் பெயர்கள் வழித்துணைநாதர், விரிஞ்சை விமலர், மார்க்கசாயர், கௌரீஸ்வரர், (கௌரி தவம் இருந்த தலம்) பிரம்மபுரீஸ்வரர், விஷ்ணுஈசர், முடிவளைத்தவர், இகபரநாதன் என்பவை ஆகும், உற்சவர் பெயர் சோமாஸ்கந்தர், இறைவி பெயர் அருள்மிகு மரகதாம்பிகை, இறைவி பார்வதி தவக்கோலத்திலும், இறைவன் சுயம்பு உருவிலும் இருந்து அருளுவதாகக் கூறப்படுகிறது.

சுற்றுப்பிரகார சன்னதிகள் நுழைவாயிலின் இடப்புறத்திலிருந்து ஏரம்ப விநாயகர், சொர்ண கணபதி, பிச்சாண்டீஸ்வரர் உற்சவர், வள்ளி தெய்வானை சமேத ஆறுமுக சுவாமி, காசிலிங்கம் (வருணலிங்கம்) செல்வ விநாயகர்,





சண்டிகேஸ்வரி, பள்ளியறை நவராத்திரி கொலு மண்டபம், சிம்மம், பலிபீடம், துவஜஸ்தம்பம், சிவகாம சுந்தரி சமேத நடராஜர் (உற்சவர்) காலபைரவர், சனீஸ்வரார், நவக்கிரகங்கள், சூரியர், 108 லிங்கம் ஆகியவை சுற்றி உள்ளன. துவாரபாலகர், நால்வர், பொல்லாப்பிள்ளையார், 63 நாயன்மார்கள், சப்தமாதாக்கள், ஸ்ரீநர்த்தனவிநாயகர், தட்சணாமூர்த்தி, லக்ஷ்மி சரஸ்வதி, சுந்தரேஸ்வரர், வாசுதேவ பெருமாள், சண்டிகேஸ்வரர் விஷ்ணு துர்கை அம்மன் ஆகிய சன்னதிகள் உட்பிரகாரத்தில் அமைந்து உள்ளன. கொடிமரம் சுமார் 54அடி உயர செப்பு கவசத்துடன் கூடியது. அடி பீடம் பித்தளைக்கவசம் பதிக்கப்பட்டது. திருக்கோயிலுக்கு தெற்குபுறம் , பிரம்ம தீர்த்தம் சுற்றுப்பிரகாரத்தில் சிம்ம தீர்த்தம் ஆகிய தீர்த்தங்கள் உள்ளன.





இத்திருக்கோயிலில் திருமுடி வளைத்த வரலாறும் திருக்கார்த்திகை மாதம் கடைசி ஞாயிறு விழாவின் தனிச்சிறப்பு பெற்றுள்ளன. இத்திருக்கோயிலுக்கு தலவிருட்சம் பனைமரமாகும்.

இத்திருக்கோயிலின் இரண்டாம் பிராகாரத்தின் வடபகுதியில் உள்ள அம்மன் சன்னதி கோயில் நுழைவு மண்டபத்திற்கு எதிரில் உள்ளது. சுயம்புலிங்கம் அமையப்பெற்ற குழந்தைவரம், அருளும் சிறப்பு ஸ்தலமாகும்.

இத்திருக்கோயிலில் கிழக்கே இராசகோபுரம் உள்ளது. கௌரிதீர்த்தம் என்னும் பெயரில் சிம்மதீர்த்தம் விரிஞ்சை தலத்திற்கு தனிச்சிறப்பை அளித்து வருகிறது. இத் திருக்கோயிலின் முதற்பிரகாரத்தில் தென்கிழக்கே உள்ளது. இது ஒரு சிங்கத்தின் வாய்வழியாக நுழைந்துசெல்லும் முறையில் அமைக்கப்பபெற்ற நடைபாதைக்கிணறாகும். திரிசூலத்தால் நிறுவப்பட்ட சூலதீர்த்தம் கோயிலின் அருகிலுள்ளது. பாலாறும் இக்கோயிலின் தீர்த்தமாகும். பிரம்மதேவர் காயத்திரி தேவியுடன் எம்பெருமானை வேண்டி செய்த வேள்வியால் இந்த நதியில் பால்பெருக்கெடுத்து ஒடிய புராணச்சிறப்பு உள்ளது. அந்நாள் முதல் இந்நதிக்கு க்ஷீரநதி அல்லது பாலாறு என்னும் பெயர் ஏற்பட்டது என்பர். இந்நதிக்கரையில் கௌரி, திருமால், பிரம்மதேவர், கரன் ஆகியோர் எம்பெருமானை பூசித்தனர். மற்ற தீர்த்தங்கள் சிம்ம தீர்த்தம், பிரம்மதீர்த்தம், கரதீர்த்தம், சந்திர தீர்த்தம் ஆகியவை ஆகும்.





இத்திருக்கோயில் மக்கள் திரளாக வந்து பிராத்தனை செய்வது வழக்கமாக உள்ளது. குறிப்பாக கார்த்திகை மாதத்தின் ஞாயிற்றுகிழமைகளில் பெருந்திரளாக பெண்கள் வழிபாடு செய்ய வருவது குறிப்பிடத்தக்கது. இத்திருக்கோயில் அபிஷேக ஆராதனைகள் தவிர முடி இறக்குதல், காதுகுத்தல், தொட்டில் கட்டி வைத்தல், திருமணங்கள் செய்வித்தல் முதலியவை தொடர்ந்து நடைபெறுகின்றன. இப்பகுதி மக்களுக்கு மிக நெருங்கிய முறையில் இத்திருக்கோயில் இணைந்து சமுதாயத்தின் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவி வருகிறது.

இத்திருக்கோயில் கட்டடக்கலை, சிற்பக்கலை மற்றும் 'வரதட்சனை கொடுமை' குறித்த கல்வெட்டு ஆகியவற்றுக்காகச் சிறப்பு பெற்றுள்ளது. பொதுவாக சிவனுடைய மற்றும் பெருமாளுடைய திருவுருவங்களும், கற்தூண்களில் கலந்து காணப்படுகிறது. வனவிலங்கு சிற்பங்களும், கேளிக்கை சிற்பங்களும் அதிக அளவில் காணப்படுகின்றன. மிக நுட்பமான தொழில் நுட்பம் கூடிய பெரிய கற்சிற்பங்கள் உள்ளன.



இத்திருக்கோயிலில் காலம் காட்டும் சூரிய ஒளிக் காட்டி கடிகாரம் ஒன்று உள்ளது.



இத்திருக்கோயில், சித்திரைமாதம் பௌர்ணமியில் வசந்தவிழா, வைகாசி, விசாக உற்சவம், ஆனிமாதம் உத்திரத்தில் நடராசர் ஆனித்திருமஞ்சனம், ஆடிமாதம் தேரோட்டத்துடன் ஆடிப்பூரவிழா, ஆவணி மாதம் விநாயகர் சதுர்த்தி, புரட்டாசி மாதம் நவராத்திரி விழா, விஜயதசமி, பாரிவேட்டை, ஐப்பசிமாதம் பௌர்ணமி அன்னாபிஷேபிகம், கார்த்திகை மாதம் கடைசி ஞாயிறு பெருவிழா போன்ற விழாக்கள் நடைபெறுகின்றது.

### திருக்கோயில் தரிசன நேரம் :

காலை 6 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2914546

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com





# 27. அருள்மிகு எல்லையம்மன் திருக்கோயில், வெட்டுவானம்



இத்திருக்கோயில் வேலூர் – பெங்களூர் நெடுஞ்சாலையில் பள்ளிகொண்டாவிற்கு மேற்கில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது.

இது குடியாத்தம் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. வேலூரிலிருந்து மேற்கே பெங்களூர் தேசிய நெடுஞ்சாலையிலிருந்து 23 கி.மீ. தொலைவில் சவ்வாது மலைச்சாரலில் பாலாற்றின் தென்கரையில் அமைந்துள்ளது.



பாலாற்றிலிருந்து நீர்பாசனத்திற்காக கால்வாய் ஒன்றை உழவர் ஒருவர் வெட்டினார். அப்போது அங்கு நிலத்தில் புதையுண்டிருந்த அம்மனின் கன்னத்தில் மண்வெட்டி விழுந்து அம்மனின் கன்னத்திலிருந்து குருதி பெருகிற்று. அதனைக் கண்ட அவ்வுழவர் மயங்கி விழுந்து பின் எழுந்து தெளிந்து வெட்டுண்டவர் எல்லையம்மன் என்று உணர்ந்தார். இதையறிந்த மக்கள் அனைவரும்கூடி இங்கு அம்மனுக்கு ஒரு கோயிலை அமைத்தார்கள். வானம் என்னும் சொல் அம்மனை குறிக்கிறது. அம்மன் இங்கு வெட்டுண்டதால் இதற்கு வெட்டுவாணம் என்னும் பெயர் வழங்கப்பட்டு வருகிறது. ‘‘ வாணம் ‘‘ என்னும் சொல் நீண்ட கால்வாய் போன்று பறிக்கப்படும் பள்ளத்தையும் குறிக்கும் இதனை ‘வாணம் பறித்தல்’ எனவும் அழைப்பார். வாணம் பறிக்கும்போது ஏற்பட்ட வெட்டில் வெளித்தோன்றிய அம்மன் ஆகையால் வெட்டுவானம் அம்மன் என்று பெயர் ஆனது. ‘ண’ கரம் வழகத்தில் எழுத்து மாற்றி ‘ன’கரமாக வழங்கப்படுவதாகத் தெரிவிக்கப் படுகிறது.

இத்திருக்கோயிலின் கிழக்கேயுள்ள கோபுர நுழைவு வாயிலின் வழியே உள்ளே நுழைந்தால், முன்மண்டபத்தை அடுத்து, கருவறையின் இருபுறங்களிலும் விநாயகர் திருவுருவங்கள் கிழக்கு நோக்கியவாறு காணலாம். கருவறையில் கழுத்து வரையிலுள்ள ரேணுகாதேவியம்மன் திருவுருவம் கிழக்கு நோக்கி அருள் அளிக்கிறது. அம்மன் முழு உருவில் சுதை வடிவில் இருந்து அருள்பாலிக்கிறாள். வெளிப்பிரகாரத்தின் தென்மேற்கு கோடியில் உற்சவ அம்மன் திருவுருவம் சூலம், விநாயகர் திருவுருவம்





ஆகியவை உள்ளன. வடமேற்கு கோடியில் புற்றுமேடை ஒன்றுள்ளது. இத்திருக்கோயில் ஐந்து நிலைகளையுடைய ராஜகோபுரத்தையும் அம்மன் சந்நிதி மீது அழகிய விமானம் ஒன்றும் அமையப் பெற்றுள்ளது. வேலூர் மாவட்டத்திற்கு எல்லை காவல் தெய்வம் மற்றும் பிராத்தனை தலமாக இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

இத்திருக்கோயிலில் மருத்துவர்களால் கைவிடப்பட்ட நோயாளிகள், கண்ணொளி இழந்தவர்கள், உடலுறுப்பு குறைந்தவர்கள், அம்மை நோயால் அல்லலுறுவோர் போன்ற பலரும் இக்கோயிலில் நாட்கணக்கிலும் மாதக்கணக்கிலும் தங்கியிருந்து தங்கள் குறைகள் நீங்கி, மனமகிழ்வோடு திரும்புகின்ற காட்சி இன்றும் காணப்படுகிறது. அம்மனின் அபிஷேக மஞ்சள் நீரும்,





தலவிருட்சமாகிய வேம்பும், அன்னைமீது கொண்ட அசைக்க முடியாத நம்பிக்கையுமே இப்பெருமைகளுக்குக் காரணங்களாகும். மனஅமைதியை நாடி வருவோர் இம்மரத்தின் அடியில் அமர்ந்து தெளிவு பெற்று செல்கிறார்கள்.

இவ்வாறு நலம்பெற்றவர்களுள், ஒருவர் தன் காணிக்கையாக இக்கோயிலில் அலங்கார மண்டபம் அமைத்துள்ளார். ஆடிமாத வெள்ளிக்கிழமை தோறும் அன்னதானம் செய்து இலட்சதீபமும் நடத்தி வருகிறார்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 05.30 மணி முதல் நன்பகல் 12.00 மணி
மாலை 03.30 மணி முதல் இரவு 8.00 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 266330
மின்னஞ்சல் : ellaiammantemple@gmail.com

# 28. அருள்மிகு உத்தரரங்கநாதர் திருக்கோயில், பள்ளிகொண்டா.

இத்திருக்கோயில், குடியாத்தம் இருப்புப்பாதை நிலையத்திலிருந்து தெற்கே 4 கி.மீ. தொலைவில் பாலாற்றின் கரையில், பள்ளிகொண்டா என்னும் ஊரில் கிழக்கு நோக்கியவாறு அமைந்துள்ளது.



திருமால் பல தலங்களில் பள்ளி கொண்டிருப்பினும் இத்தலம் ஒன்றே "பள்ளிகொண்டா" என்னும் தனது பெயரைக்கொண்டே திருமால் பள்ளி கொண்டுள்ளதை தெரிவிக்கிறது. பள்ளி கொண்டான் என்னும் பெயர் பள்ளிகொண்டா என மொழிச்சிதைவு பெற்று வழங்கி வருகிறது.

திருமகள், கலைமகள் ஆகிய இருவருள் எவர் பெரியவர் என்னும் வாதம் எழுந்தது. இதில் தீர்ப்பு கூறுமாறு இவ்விருவரும் பிரமதேவனிடம் சென்றனர். இவ்விருவருள் திருமகள் பெரியவர் எனப் பிரம்மதேவர் தெரிவிக்க சரஸ்வதி சாசிய மலையில் வாழத்தொடங்கினாள். பிரம்மதேவர் காஞ்சியில் ஒரு வேள்வி இயற்றத்தொடங்கியபோது அதனை அழிக்கும் நோக்கில் சரசுவதி பேராற்று வடிவில் வெள்ளமாய்ப் பெருக்கெடுத்து பிரம்மதேவர் வேள்வியை அழிக்கத் திரண்டு வந்தாள். பிரம்மதேவர் திருமாலின் உதவியை நாட, அவர் விரைந்து வந்து ஆற்றின் குறுக்கே ஆதிசேடன் மீது பள்ளிகொண்டார். சரசுவதி விளைவித்த வெள்ளப்பெருக்கை தடுத்து நிறுத்தினார். திருமால் உதவியதால் பிரம்மதேவர் தமது வேள்வியை இனிது செய்துமுடித்தார். திருமால் ஆற்றின் பெருக்கை தடுத்து நிறுத்தியது மூன்று இடங்களில் ஆகும் இவற்றுள் முதல் இடம் பள்ளிகொண்டா ஆகும்.

இத்திருக்கோயிலின் தலவிருட்சம் பாதிரி மரமாகும். குலசேகராழ்வார் திருவுருவம் உள்ளது. கருடாழ்வார் சந்நிதி முன்

மண்டபத்தில் உள்ளது. வாயிலின் இருபுறங்களிலும் துவாரபாலகர் திருவுருவங்கள் உள்ளன. கருவறையின் இடப்புறம் கஸ்தூரி ரங்கநாதர் சன்னதி உள்ளது. இத்திருக்கோயிலின் வடக்கு பிராகாரத்தில் தீர்த்த கிணறு இருக்கின்றது.

இத்திருக்கோயிலுக்கு வாகனங்களும் பல்லக்கும் உள்ளன. ஐந்து கால பூஜைகள் நடைபெறுகிறது. வெள்ளிக்கிழமை தோறும் தாயார் திருமஞ்சனம், சித்திரையில் பத்து நாள் பிரம்மோற்சவம், கருடசேவை, திருத்தேர், புஷ்பபல்லாக்கு திருவிழாக்கள் நடைபெறுகின்றது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 266330

மின்னஞ்சல் : ellaiammantemple@gmail.com



# 29. அருள்மிகு காசி விஸ்வநாத சுவாமி திருக்கோயில், வேலூர்.

வேலூர் பழைய பேருந்து நிலையத்திற்கு அருகிலும், சி.எம்.சி. மருத்துவமனைக்கு எதிரில் சுக்கைய வாத்தியார் தெருவில் அமைந்துள்ளது. பேரிப்பேட்டை அருள்மிகு காசிவிசுவநாதர் திருக்கோயிலாகும்.





தம்மை நாடியோரைக் கைவிடாமல் காக்கும் அருள்மிகு விசாலாட்சி சமேத காசி விசுவநாதசுவாமி, வேலூர் சி.எம்.சி. மருத்துவமனை முன் வாயிலின் எதிர்புறம் சுக்கையா வாத்தியார் தெருவில் சுமார் 300 மீட்டர் தொலைவில் இருந்து அருள்பாலித்து வருகிறார்.

சுமார் 300 ஆண்டுகளுக்கு மேல் பழமைவாய்ந்த இத்திருக்கோயிலின் பிரதான வாயில் தென்புறம் உள்ளது. காசி விஸ்வநாதர் மற்றும் விசாலக்ஷி அம்மன் தனித்தனி சன்னதிகளில் குடியிருந்து பக்தர்களுக்கு அருளை வாரி வழங்குகின்றனர்.

திருக்கோயில் பரிவார தேவதைகளாக அருள்மிகு விநாயகர், வள்ளிதேவசேனா, சமேத சுப்ரமணியர், அருள்மிகு சண்டிகேஸ்வரர், தட்சிணாமூர்த்தி, மகாவிஷ்ணு, துர்கை, காலபைரவர், வீரபத்ரர் ஆகியோர் அருள் பாலித்து வருகின்றனர்.

நவக்கிரகங்கள் தனியே வெளிப்புற சன்னதியில் அருள் அளிக்கின்றனர். உற்சவர் சன்னதியில் அருள்மிகு சோமாஸ்கந்தர் பரிவாரங்களுடன் காட்சியருளுகிறார். இத்திருக்கோயிலில் ஆனி திருமஞ்சன தினத்தை மையமாக கொண்டு ஒவ்வொரு ஆண்டும் 13 நாட்கள் பிரம்மோற்சவம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

பிரதோஷ பூஜைகளுடன் மாத உற்சவங்களான கிருத்திகை, மாதப்பிறப்பு, போன்றவை நடைபெறுகின்றன. நவராத்திரி 9 நாள் உற்சவம், ஐப்பசி பௌர்ணமி, அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், ஆருத்ரா உற்சவமும், மேற்படி நாட்களில் சங்காபிஷேகம் நடைபெறுவதும் மிக சிறப்பானதாகும்.



மூலவர் அருள்மிகு காசி விசுவநாதர் லிங்க வடிவில் காட்சி தருகிறார். இடதுபுறம் தனிச்சன்னதியில் நின்றருளும் அருள்மிகு விசாலாட்சி நான்கு கரங்களுடன் தம்மை நாடி வரும் பக்தர்களை தாயாய் தாங்குகிறார்.

அம்மை, ஈசன் அருள் பெற்றிட வட மாநிலத்தார் பெருமளவு வருவது வழக்கத்தில் உள்ளது. நோயுடன் வந்த வட மாநிலத்தார் இறைவன் அருளால் அவர் பெறும் மருத்துவ சிகிச்சைகள் பலன் அளித்து மகிழ்ச்சியை திருக்கோயிலில் நிகழ்வுகளில் பங்குக்கொள்வது மகிழத்தக்கதாகும்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2215658

மின்னஞ்சல் : eoreddychatram@gmail.com





# 30. அருள்மிகு தாரகேஸ்வரர் திருக்கோயில், வேலூர்.



பாலாற்றின் தென்கரையில் வேலூர் மாநகரில் கரும்புத் தோட்டங்கள் நிறைந்திருந்த தோட்டப்பாளையம் பகுதியில் அருணகிரி நாதர் பாடிய வேலூர் திருப்புகழ் பாடல் பெற்ற ஆறுமுகர் வாழும் இடமாக அமைந்துள்ள 'அருகந்தம்பூண்டி' என்ற பகுதியில்



தாரகேசுவரர் கோயில் என்ற பெயரில் லிங்க வடிவில் இறைவன் கோவில் கொண்டுள்ளார்.

இத்திருக்கோயில் வேலூர் மாநகரில் பழைய பேருந்து நிலையத்திலிருந்து **0.5** கி.மீ. தொலைவில் பழைய காட்பாடி ரோட்டில் தோட்டப்பாளையம் என்ற பகுதியில் அமைந்துள்ளது. காட்பாடி இரயில் நிலையத்திலிருந்து **6** கி.மீ. தொலைவில் உள்ளது.

இத்திருக்கோயிலில் உள்ள மூலவர் அருள்மிகு தாரகேசுவரசுவாமி என்றும், அம்பாள் அருள்மிகு அபயாம்பிகை அம்மன் என்றும் அழைக்கப்படுகிறது இறைவனுடைய திருக்கோலம் நின்ற நிலையில் உள்ளது. இத்திருக்கோயில் சிவ ஆகமம் முறைப்படி பூஜைகள் நடைபெறுகின்றன. நடைமுறையில் உள்ளது.



இத்திருக்கோயில் உள்ள மூலவர் இரண்டு ஆவுடையார்கள் கொண்ட சிறப்பு இங்கு மட்டுமே காணப்படுகிறது.

சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், பெருமாள், சுந்தரவிநாயகர், காசி விஸ்வநாதர், நாகர்மேடை, நவக்கிரக மேடை, நவக்கிரக, நடராஜர், சனீஸ்வரர் சன்னதி உள்ளன. உட்பிரகாரத்தில் முருகர் வள்ளி தெய்வானை சன்னதி. கொடி மரமும், பலி பீடம் ஆகியவை உள்ளது.

இத்திருக்கோயிலில் சித்திரை பெருந்திருவிழாவாக 10 நாள் பிரம்மமோற்சவம் ஆண்டுதோறும் நடைபெறுகிறது. மேலும் சித்ரா பௌர்ணமி அன்று புஷ்ப பல்லக்கு திருவிழாவும், நால்வர் விழா மாசி மாதம் மகாசிவராத்திரி, பிரதோஷம், மற்றும் கிருத்திகை ஆகிய திருவிழாக்கள் மிக சிறப்பாக கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு வாரமும் சுக்கிரவாரத்தன்று (வெள்ளிக்கிழமை அன்று) சுக்கிரவார அம்மன் புறப்பாடு மிகச்சிறப்பாக நடத்தப்படுகிறது.

**திருக்கோயில் தரிசன நேரம் :**

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : **0416 – 2222375**
மின்னஞ்சல் : eotharageswarar@gmail.com



# 31. அருள்மிகு வரதராஜ பெருமாள் திருக்கோயில், சோழவரம்.



வேலூர் வட்டம், சோழவரம் கிராமத்தில் அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோயில் அமைந்து உள்ளது. சோழவரம் கிராமம் வேலூரில் இருந்து தெற்கு நோக்கி 15 கி.மீ தூரத்தில் உள்ளது. இப்பகுதியை சோழமன்னர்கள் ஆண்டு வந்ததால் சோழவரம் என்ற பெயர் வந்ததாகத் தெரியவருகிறது.

இத்திருக்கோயிலுக்கு கிழக்கில் இரண்டு ஏரிகள் உள்ளது என்றும், ஏரிக்கு நீர்வரத்துக்கு மலையிலிருந்து கால்வாய் வசதி செய்யப்பட்டுள்ளது. இக்கோயிலுக்கு வடமேற்கில் பெரிய சிவன்





திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் தலை வாயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. வரதராஜ பெருமாள் மேற்கு பார்த்தவாறு காட்சி தருகிறார்.

திருக்கோயிலுக்கு மேற்குபுறத்தில் சுமார் 200 ஏக்கர் பரப்பளவில் கோட்டை இருந்துள்ளது. சோழவரம் கிராமத்திற்கு தெற்கில் சுமார் 5 கி.மீ தொலைவில் நாகநதி ஆறு உள்ளது. அருள்மிகு வரதராஜப் பெருமாள் பிரம்மோற்சவத்தில் தீர்த்தவாரிக்காக நாகநதி ஆற்றிற்கு சென்று வந்ததாக கிராமப் பெரியோர்கள் தெரிவித்தனர். இக்கோயிலுக்கு கிழக்கில் திருக்குளம் இருந்ததாகவும், பிற்காலத்தில் குளம் தூர்ந்து விட்டது எனவும் தெரிவிக்கப்படுகிறது.

மேற்படி திருக்கோயிலுக்கு ஸ்ரீதேவி பூதேவியுடன் கூடிய அருள்மிகு வரதராஜ பெருமாள் சிலைகள் உள்ளன.

தினசரி ஒரு கால பூஜை நடைபெற்று வருகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2225447

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com



# 32 . அருள்மிகு கடம்பவன வாசவியம்மன் திருக்கோயில், கணியம்பாடி.

வேலூர் – திருவண்ணாமலை நெடுஞ்சாலை கணவாய் பகுதியில் கணியம்பாடியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் கணியம்பாடி பேருந்து நிறுத்தம் அருகிலும்,





கணியம்பாடி ரெயில் நிலையத்திற்கு இரண்டு கிலோ மீட்டர் தூரத்திலும் அமைந்துள்ளது.

இத்தலத்தில் கடம்பவனவாசவி, கன்னி அமர்ந்த திருக்கோலத்திலும், கன்னிக்கோயில், தனி சன்னதியும் உள்ளது. கொடிமரம் 30 அடி உயரம் உள்ளது. பலிபீடமும் உள்ளது. இத்திருக்கோயில் அருகில் வனப்பகுதி அமைந்துள்ளது.

அம்மனை வேண்டி அம்மன் மடிமீது எலுமிச்சம்பழம் வைத்து வேண்டி பக்தர்களுக்கு வழங்குவது வழக்கம். அந்த எலுமிச்சம் பழம்





வீட்டில் வைத்தால் நினைத்த காரியம் நிறைவேறும் என்பது பக்தர்களின் குறையாத நம்பிக்கை.

இத்திருக்கோயிலில் பிரதி வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு அபிஷேகமும், வழிபாடும் நடைபெறுகிறது. மார்கழி மாத பௌர்ணமி மற்றும் சித்திரை மாத பௌர்ணமி அன்று 108 பால் குட அபிஷேகம், இரவு சுவாமி திருவீதி உலாவும் நடைபெற்று வருகிறது. ஆடிமாத ஐந்து வெள்ளிகளிலும் சிறப்பு அபிஷேகமும் நடைபெற்று வருகிறது. திருமணம் மற்றும் குழந்தை வரம் வேண்டி வணங்கும் பிராத்தனைத்தலமாகும். அம்மன் மடியில் பிள்ளையார் அமர்ந்துள்ளது சிறப்புக்குரிய ஒன்றாகும். இதனால் அம்மனை வேண்டும் போது எவ்விதக் காரியங்களும் தடை இல்லாமல் நடைபெறும் என்ற நம்பிக்கை மக்கள் மனதில் உறுதியாக உள்ளது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2225447

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com

# 33. அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில், வேலூர்



இத்திருக்கோயில் வேலூர் பழைய பேருந்து நிலையத்தில் இருந்து சுமார் 3 கி.மீ. தூரத்தில் உள்ள வேலப்பாடியில் அமைந்துள்ளது.

வேலூர் மாநகரின் மையப்பகுதியான, வேலப்பாடியில் அமைந்துள்ள பழமை வாய்ந்த இத்திருத்தலம் இப்பகுதியின் அடையாளமாக விளங்குகிறது. ஸ்ரீதேவி, பூதேவி, சமேதராக எழுந்தருளியுள்ள அருள்மிகு வரதராஜப்பெருமாள் நின்ற கோலத்தில் அருள் புரிகிறார். திருக்கோயிலில் தாயார் பெயர் அருள்மிகு பெருந்தேவித்தாயார், வைகானாச ஆகமப்படி தினசரி இருகால பூஜை நடைபெறுகிறது. இத்திருக்கோயில் உள்ள



அருள்மிகு வரதராஜப்பெருமாள் வேண்டியோருக்கு வேண்டிய வரம் அருளுவது சிறப்பு.

மேற்கு நோக்கி அருளும் அருள்மிகு ஆஞ்சநேயருக்கு ஞாயிற்றுக் கிழமைகளில் ராகு காலத்தில் 9 விளக்குகள் ஏற்றி வணங்கினால் திருமணத்தடை நீங்கி திருமணம் நடைபெறுதல், குழந்தை பாக்கியம் பெறுதல், போன்றவை நிறைவேறும் என்ற உறுதியான நம்பிக்கை உள்ளது.

அதேபோல் ஆடிப்பூரம் மற்றும் பங்குனி உத்திரத்தில் நடைபெறும் சுவாமி திருக்கல்யாணத்தில் கலந்து கொள்வோர்க்கு திருமணத்தடை விலகும் என்பது நம்பிக்கை.

ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் 10 நாட்கள் பிரம்மோற்சவம் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. அந்நாட்களில் அருள்மிகு வரதராஜர் திருவீதி உலா வருவது சிறப்பாகும்.

இத்திருக்கோயிலில் மாதப்பிறப்பு, தமிழ் மற்றும் தெலுங்கு, ஆங்கிலப் புத்தாண்டு பிறப்பு உற்சவங்கள், ஆடிப்பூரம், ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி, கார்த்திகைத் திருவிழா, வைகுண்ட ஏகாதசி, கூடாரவல்லி, மகரசங்கராந்தி உற்சவங்களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2235512

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com

# 34. அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில், மூஞ்சூர்பட்டு, வேலூர்–1



இத்திருக்கோயில் வேலூர் – திருவண்ணாமலை சாலையில் அடுக்கம்பாறை அரசு பொது மருத்துவமனை அருகில் உள்ள மூஞ்சூர்பட்டு கிராமத்தில் அமைந்துள்ளது.

மூஞ்சூர்பட்டு கிராமத்தில் அமைந்துள்ள பழமைமிகு இத்திருக்கோயிலில் அருள்மிகு நாகநாதசுவாமி நாகவல்லி அம்பாளுடன் இணைந்து தரிசனம் தருகிறார்.



இராகு– கேது கிரக தோஷமுள்ளவர்கள், காள சர்ப்ப தோஷமுள்ளவர்களுக்கு பரிகார ஸ்தலமாகும்.

ஸ்ரீகாளஹஸ்தி திருக்கோயிலுக்கு சமமாக தோஷங்கள் நீக்கும் தலமாக விளங்குகிறது. தோஷமுள்ளோர்கள் பரிகாரம் செய்துக்கொள்ளும் சிறந்த தலமாகவும் விளங்குகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2225447

மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com





# 35. அருள்மிகு சப்த ரிஷிஸ்வரர் திருக்கோயில், ஒடுக்கத்தூர்



வேலூர் மாவட்டம், அணைக்கட்டு ஒன்றியம், ஒடுக்கத்தூரில் அருள்மிகு சப்தரிஷிஸ்வரர் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் மிகப்பழமையான திருக்கோயிலாகும். திருவண்ணாமலையில் உள்ள அண்ணாமலையார் கோயிலுக்கு இணையான சிறப்புடையது இத்திருக்கோயிலாகும்.

இத்திருக்கோயிலுக்கு பின்புறம் உத்திர காவேரி என்ற பெயர் கொண்ட ஆறு ஓடுகிறது. இத்திருக்கோயிலில் 7 ரிஷிகள் தங்கியிருந்ததாகவும் அவர்கள் அதிகாலையில் எழுந்து இந்த



ஆற்றில் தலை மூழ்கி நீராடிவிட்டு தங்களை தூய்மைப்படுத்திக் கொண்டு தியானம் செய்வார்கள். மனிதர்கள் எவ்வாறு ஐம்புலன்களை அடக்கி ஒழுக்கத்துடன் வாழ வேண்டும் என மக்களுக்கு தங்களது ஒழுக்க முறை மூலம் கற்பித்தனர். சப்தம் என்றால் 7. 7 ரிஷிகள் இத்திருக்கோயிலில் வாழ்ந்து வந்ததால் இத்திருக்கோயிலுக்கு சப்த ரிஷிஸ்வரர் திருக்கோயில் எனப்பெயர் வந்தது.

ஒழுக்கத்தை இவர்கள் மக்களுக்கு போதித்ததால் இவ்வூர் ஒழுக்கத்தூர் என்று அழைக்கப்பட்டது. இப்பெயர் காலப்போக்கில் ஒழுக்கத்தூர் ‘‘ஒடுக்கத்தூர்’’ என்று மருவி அழைக்கப்படுகிறது. இத்திருக்கோயில் ‘‘ஒடுக்கத்தூர் சுவாமிகள்’’ என்ற பெயரில் ஒரு மகான் வாழ்ந்து வந்தார். இவர் ஒழுக்கத்திற்கு முக்கியத்துவம் தந்த






ஒழுக்கத்தூரில் பிறந்தார். கல்வியில் நாட்டமில்லாமல் அவருடைய மனம் ‘‘சாகா வரம்’’ பெறும் முயற்சியில் ஈடுபட்டு அதில் அவர் ஞானம் பெற்று பல சித்து வேலைகளை செய்தார். சுவாமிகளின் பெருமை பற்றி மக்களுக்குத் தெரியவர பல மாநில மக்கள் வர ஆரம்பித்தார்கள் அவ்வாறு வந்தவர்களில் ஒருவர் பெங்களூரைச் சேர்ந்த நாகாபாய். அவர் சுவாமியின் சித்துக்களால் கவரப்பட்டு சுவாமிகளை பெங்களூரில் உள்ள அல்சூர் ஏரி அருகே நந்தவனம் அமைத்து அங்கு சுவாமியை தங்கச் செய்தார். அங்கு சிவப்பெருமானின் பெருமையை பரப்பிய ஒழுக்கத்தூர் சுவாமிகள் 16.02.1915 அன்று ஸ்வாதி நட்சத்திரத்தில் தியானத்தில் இருந்த சுவாமிகள் பரிபூரண ஜீவ சமாதி எய்தினார்.

ஒழுக்கத்தூர் சுவாமிகளினால் இத்திருக்கோயிலுக்கு புகழ் கூடியது. இன்றும் இத்திருக்கோயில் பிரதோஷம், ஆடி கிருத்திகை, சிவராத்திரி, கார்த்திகை தீபம், பௌர்ணமி போன்ற தினங்களில் மக்கள் இங்கு வந்து சிவ பெருமானின் அருளைப் பெற்று செல்கின்றனர்.

### திருக்கோயில் பூஜை நேரம்

காலை: 8.00 மணி முதல் 12.00 மணி வரை
மாலை: 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2225447
மின்னஞ்சல் : eorathnagiri@gmail.com



# 36. அருள்மிகு சொர்ணமுகீசுவரர் மற்றும் சொர்ண விநாயகர் திருக்கோயில் , காந்தி நகர்.



இத்திருக்கோயில் காட்பாடி வட்டம், காந்தி நகரில், சித்தூர் – வேலூர் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது.

மேற்படி திருக்கோயில் ஒடைப்பக்கத்தில் அமைந்துள்ளதால், ஒடைப்பிள்ளையார் என்ற சிறப்பு பெயரும் உண்டு. பின்னர் இப்பகுதியை மனைகளாகப் பிரித்து காந்திநகர் என்று பெயரிட்டனர். ஆனால் ஓடைப் பிள்ளையார் கோயில் என்ற பெயர் வெகு பிரசித்தம். இத்திருக்கோயில் ஈஸ்வரர் சன்னதிக்கு சந்தனம் வைத்ததால் சொர்ணமாக (தங்கமாக) பிரதிபலிக்கும். எனவே சொர்ணமுகிஸ்வரர் என்ற பெயர் உண்டு. மேலும் முதலாம்





இராஜராஜசோழன் இவ்வழியாக வந்தபோது இத்திருக்கோயிலை பார்வையிட்டு சங்கு தானமாக வழங்கப்பட்டது என்ற வரலாறு உள்ளது.

உற்சவர் பெயர் சந்திரசேகரர், இறைவி பெயர் சௌந்தரநாயகி நின்ற நிலையிலும், இறைவன் லிங்க வடிவிலும் காட்சி தருகிறார்கள். விநாயகர் தெற்கில் கிழக்கு முகமாக அமர்ந்து ஒடைப்பிள்ளையார் என்னும் பெயருடன் அருள்பாலித்து வருகின்றாள். அருகில் மேற்கு நோக்கியவாறு சொர்ணமுகீசுவரர் அருள்புரிந்து வருகின்றார். அம்பாள் அமர்ந்த நிலையில் தெற்கு நோக்கி காட்சியளிக்கிறார். ஒரே இடத்தில் நின்று அம்பாளையும் சுவாமியையும் வழிபடுவது சிறப்பாகும். காமிக ஆகமம் முறையில் பூசை நடைபெறுகிறது.

நவக்கிரகங்கள் தம் தேவியருடன் கல்யாண நவக்கிரகங்களாக காட்சி தந்து அருள்பாலித்து வருகின்றனர். வடக்கில் முருகன் வள்ளி, தெய்வானை ஆகியோருடன் அமர்ந்து அன்பர்களுக்கு காட்சி தருகின்றார்.

முத்துமாரியம்மன் திருக்கோயில் இங்குள்ளது, இங்கு இருக்கும் அம்மன் கிழக்கு நோக்கியவாறு அமர்ந்துள்ளாள். இங்கு விநாயகர், முருகன் ஆகியோர் சன்னதிகளும் உள்ளன. அம்மை, வயிற்று வலி போன்ற நோய்களினால் துன்புறும் மக்கள் பிரார்த்தனை செய்து நோய் நீங்கப்பெற்று, நலமடைந்து செல்கின்றனர். மகளிரின் வார வழிபாடும், சாஸ்தாவின் கார்த்திகை நோன்பும் சிறப்பு மிக்கவை.



இத்திருக்கோயிலில் சித்திரை பௌர்ணமி, ஆடி வெள்ளிக்கிழமை, விநாயகர் சதுர்த்தி நவராத்திரி, கார்த்திகை தீபம், தை, வெள்ளிக்கிழமை ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்குட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2212761

மின்னஞ்சல் : eo1rangapuram@gmail.com





# 37. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், காங்கேயநல்லூர்.



குடியாத்தம் வட்டத்தில் வேலூருக்கு வடகிழக்கில் 4 கிலோ மீட்டர் தொலைவில், காட்பாடி இருப்புப்பாதைக்கு நிலையத்திற்கு 4 கிலோ மீட்டர் தென்கிழக்கில் உள்ள காங்கேயநல்லூரில் அமைந்துள்ளது அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் ஆகும்.



இங்கு காங்கீசுவரர் கோயில் கொண்டிருப்பதால் இந்த ஊருக்கு காங்கேயநல்லூர் என்னும் பெயர் வழங்கிவருகிறது. இக்கோயிலின் தலவிருட்சம் நாகலிங்க மரமாகும்.

இக்கோயிலின் கிழக்கு கோபுர வாயிலின் வழியாகக் கோயிலினுள் செல்ல பலிபீடத்தையும், அதனையடுத்து கொடிமரத்தையும் அடுத்து மயில் வாகனத்தையும் காணலாம். ஆன்மிகச் செம்மல் அருள்திரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவதரித்த திருத்தலமாகும்.

கருவறையில் வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியசுவாமி கிழக்கு நோக்கியவாறு நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இங்கு எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் கற்சிலையும் திருத்தணிகை முருகப்பெருமான் கற்சிலையும் ஒரே சிற்பியால் செய்யப்பட்டவை என்பது செவிவழி செய்தியாகும். இத்திருக்கோயிலின் அருகில் சரவணப்பொய்கையும், வடக்கு வெளிப்பிரகாரத்தில் தீர்த்த கிணறும் இருக்கின்றன. விநாயகர், காசிலிங்கம், வள்ளி தெய்வானை , முருகர், அருணாகிரி நாதர், பழனியாண்டவர் பரிவார மூர்த்திகள் உள்ளன. கொடிமரமும், பலி பீடமும் உள்ளது.

இத்திருக்கோயிலில் நான்கு காலப்பூசைகள் நடைபெற்று வருகின்றது. ஏகாந்த சேவைக்கு பிறகு காலைச்சந்தி, உச்சிக்கால பூசை, சாயங்கால பூசை, அர்த்தசாம பள்ளியறை பூசைகள் நடைபெற்று வருகின்றன. இத்திருத்தலத்தில் தவத்திரு வாரியார் சுவாமிகள் அருட்பாடல்களும், பொன்மொழிகளும் பொறிக்கப் பட்டுள்ளன. ஆடிக்கிருத்திகை, கந்த கஷ்டி, கார்த்திகை தீபம்,







தனூர் மாதம், பங்குனி உத்திரம், தமிழ் வருடப்பிறப்பு, மாசி மாதம் 10ம் நாள் பிரம்மோற்சவம், தெய்வானை திருக்கல்யாணம், இலட்ச தீப நல்விழா ஆகிய திருவிழாக்கள் நடைபெறுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 0416 – 2242836

மின்னஞ்சல் : eo1rangapuram@gmail.com



# 38. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், வள்ளிமலை.

இன்றைய வேலூர் மாவட்டத்தில் காட்பாடி வட்டத்தில் திருவலம், காட்பாடி இரயில் நிலையங்களுக்கு வடக்கே 19 கி.மீ. தொலைவில் காட்பாடி – பொன்னை – சாலையில் அமைந்துள்ளது. வேலூரிலிருந்து, சோளிங்கர் – திருத்தணி செல்லும் வழித்தடத்தில் 25 கி.மீ. தூரத்திலும், இராணிப்பேட்டையிலிருந்து, பொன்னை செல்லும் வழித்தடத்தில் 22 கி.மீ தூரத்திலும் வள்ளிமலை உள்ளது.



திருவலம் – பொன்னை சாலையில் கோட்டநத்தம் கிராமத்தில் இறங்கி மேற்கே சிறிது தூரம் நடந்தால் இத்திருக்கோயிலை அடையலாம்.

கந்தபுராணத்தில் வள்ளி திருமணம் வரலாறுபடி, வேடர் குல தலைவர் நம்பிராஜனின் மகளாக ஸ்ரீவள்ளியம்மை பிறந்து வளர்ந்து வேடர்குல வழக்கப்படி தினைப்புனம் காக்கச் சென்றாள். வள்ளியை மணம்புரிய வந்த வேலன் வேடனாக, விருத்தனாக, வேங்கைமரமாக, முனிவராக அவதாரம் கொண்டு சோதிக்க, வள்ளியும் தான் முருகனை தவிர வேறு ஒருவரை மணமுடியேன் என உறுதியாக கூறினாள். முருகனும் அருள்புரிந்து தன் அவதார உருவத்தைக் காட்டவும், மனுமுவந்து திருமணத்திற்கு ஒப்புக்கொள்ள ஸ்ரீவள்ளி முருகன் திருமணம்நடைபெற்றது. மால் மருகன் தினைப்புனங்காத்த திருமகளாம் இச்சா சக்தியின் இன்னருள் வள்ளியுடன் திருவடி பதித்து திருவிளையாடல் புரிந்த திருத்தலமே வள்ளிமலை. இங்கு உள்ள மலை 1300 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

இத்திருக்கோயிலின் நுழைவு வாயிலின் வலதுபுறம் ஸ்ரீவரசித்தி விநாயகர் தெற்கு நோக்கி காட்சி அளிக்கிறார்.



அங்கிருந்து கல்படிக்கட்டு பாதையில் நடந்தால் எதிரே கிழக்கு நோக்கி சண்முகர் சன்னதி உள்ளது. அதற்கு மேற்கு பகுதியில் சரவண பொய்கை தெப்பக்குளமும், ஸ்ரீவள்ளியம்மை சன்னதியும் உள்ளது. அங்கிருந்து தொடங்கி 444 படிக்கட்டுகள் ஏறினால், மலைமீது ஒரே பாறையில் குடையப்பெற்ற குகைக்கோயில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. உற்சவர் பெயர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி, இறைவி பெயர் வள்ளியம்மை, தெய்வானை, தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம். சுற்றுப்பிரகார சன்னதிகள் நுழைவாயிலிருந்து இடப்புறத்தில் விநாயகர், காசி விஸ்வநாதர், விசாலாட்சி, வீரபத்திரர், சண்டிகேஸ்வரர், அருணகிரிநாதர், நவவீரர்கள் சன்னதிகள் உள்ளன. கொடிமரம் வடக்கு நோக்கியும், பலிபீடம் தெற்கு பகுதியில் அமைந்துள்ளது.






வள்ளி ஆலோலம் பாடி ஆயலோட்டிய மண்டபங்கள், சூரியன் கானாத சுனைகள், கணேசகிரி, வள்ளிக்கோயில், சரவணப்பொய்கை, எட்டுக்கால் மண்டபம், சமணர்குகை, மற்றும் மற்றும் மான் கருவுற்ற ஒடை ஆகியவை காணக்கூடிய சிறந்த வரலாற்று இடங்களாகும். வள்ளி முருகன் திருமணம் நடைபெற்ற திருத்தலம் இதுவாகும்.

இத்திருத்தலத்தில் நான்கு கால பூஜை நடைபெற்று வருகிறது. காலசந்தி, உச்சிகாலம், சாரட்கைஷ, அர்த்தஜாமம் ஆகிய காலங்களில் பூஜை நடைபெறுகிறது.

இத்திருக்கோயிலில் சித்திரா பௌர்ணமி, வைகாசி விசாகம், ஆடிக்கிருத்திகை, தெப்பல் திருவிழா, நவராத்திரி கந்தசஷ்டி, லட்சார்ச்சனை, கார்த்திகை தீபம், தைப்பூசம், மாசிமகம்,





பிரம்மோற்சவ தேர்த்திருவிழா, பங்குனிமாத கடைசியில் படிவிழா ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகிறது. இவைகள் தவிர மாத, வார ஏறுபடிகளும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு வருடம் பிரம்மோற்சவத் தேர்திருவிழா மாசி மகத்திற்கு முன் பஞ்சமி திதியில் கொடியேற்றத்துடன் துவங்கி 6 நாள் வாகன உற்சவம் புறப்பாடு நடைபெறும், 7–ம் நாள் முதல் 10–ம் நாள் முடிய நான்கு நாட்கள் தேர் மலையை சுற்றி வருதல் வேறெங்கும் காணப்படாத சிறப்பாகும், பக்தர்கள் நான்கு நாட்களும் தேருடனேயே வலம் வந்து விரதம் இருந்து வழிபடுதலும் 11–ம் நாள் காலையில் வேடுவர்கள் தேனும் தினை மாவும் படையல் செய்தலும் வேடர்பரி உற்சவம் ஸ்ரீ வள்ளியம்மை திருக்கல்யாணம் செய்வித்தலும் சிறப்பு வாய்ந்ததாகும்.

பக்தர்கள் முடிகாணிக்கை செலுத்துதல், காதணி விழா செய்தல், எடைக்கு எடை நாணயம் செலுத்துதல், (துலாபாரம்) காவடி செலுத்துதல் சிறப்பாகும். திருமணம் நடைபெற வேண்டியும், குழந்தை பாக்கியம் வேண்டியும் பக்தர்கள் பிராத்தனை செய்கிறார்கள்.

### திருக்கோயில் தரிசன நேரம் :

காலை 7 மணி முதல் 12 மணி வரை
மாலை 2 மணி முதல் 7 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்குட்பட்டது
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com





# 39. அருள்மிகு வில்வாதீஸ்வரர் திருக்கோயில், திருவலம், காட்பாடி வட்டம்.



காட்பாடி வட்டத்தில் சென்னை – சித்தூர் நெடுஞ்சாலையில், நீவா பொன்னை நதிக்கரையில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. வாலாஜா முத்துக் கடையிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும், வேலூரிலிருந்து 20 கி.மீ. தொலைவிலும் காட்பாடியிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. தொண்டை நாட்டில் பாடல் பெற்ற 32 சிவத்தலங்களுள் 10வது தலமாகப்போற்றப்பெறுகிறது.

திருவலம் தலத்திலிருந்து 4 கி.மீ. தொலைவில் கஞ்சன்கிரி மலை உள்ளது. பழங்காலத்தில் கஞ்சன் என்னும் அசுரன் இங்கு





வாழ்ந்து வந்தான். இம்மலையிலிருந்து கோயிலுக்கு தீர்த்தம் கொண்டுவருவதை கஞ்சன் தடுத்தான் இதனால் அடியார்கள் மனம் வருந்தி இறைவனிடம் முறையிட்டனர். இறைவன் பணித்தபடி நந்தியம்பெருமான் சென்று கஞ்சனுடன் போரிட்டு அவனை அழித்தார். அசுரன் மீண்டும் உயிர் பெற்று சுவாமியை தாக்கவருவான் என கருதி நந்தியம்பெருமான் கோயிலின் எதிர்த்திசையான கிழக்கு நோக்கி உள்ளார்.

இத்திருக்கோயில் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருத்தலமாகும்.

இத்தலத்திலுள்ள இறைவனின் திருப்பெயர் வில்வநாதீஸ்வரர், வல்லநாதர், திருவல்லமுடையார், தீக்காலி வல்லமுடைய பரமேஸ்வரர் என்பவை ஆகும்.

திருஞானசம்பந்தர், பட்டினத்து அடிகள், தெய்வச் சேக்கிழார், அருணகிரி நாதர், இராமலிங்க வள்ளலார் ஆகியோரால் பாடப்பெற்ற திருத்தலமாகும்.

திருவல்லம் என்று போற்றப்பெறும் இத்தலம் ஆதிகாலத்தில் “கூவிளம்” எனும் வில்வமரங்கள் அடர்ந்த பெருங்காடாக திகழ்ந்தது. வில்வாரண்யம் என்று போற்றப்பெற்ற இக்காட்டில் ஓங்கி வளர்ந்த புற்று ஒன்றில் சுரபிக்குலமாம் தெய்வப்பசு ஒன்று நாள்






தோறும் பால் சொரிந்து அப்புற்றிலிருந்து சிவலிங்கம் வெளிப்பட்டது. தேவர்கள், முனிவர்கள் போற்றி மகிழ்ந்தனர். கணபதிவலம் வந்து வணங்கினார் அக்காரணத்தால் திருவலம் என்ற பெயர் அமைந்தது என்பர்.

இத்திருக்கோயிலில் மாசி மாதத்தில் பத்து நாட்கள் பிரம்மோற்சவ திருவிழா, வருடத்தில் 6 முறை நடராஜர் அபிஷேக விழாவும், ஐப்பசி பௌர்ணமி அன்று நடைபெறும் அன்னாபிஷேகமும், நால்வர் மற்றும் அறுபத்து மூவர் குருபூசை விழாக்களும், ஜனவரி முதல் நாளில் ஸ்ரீலஸ்ரீ சிவானந்த மௌனகுரு சுவாமிகள் குருபூஜை விழாவும், மாதம் பிரதோஷ விழாவும், சிவராத்திரி விழாவும் வெகு விமரிசையாக நடைபெறுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம் :

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்குட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com



# 40. அருள்மிகு கெங்கையம்மன் திருக்கோயில், குடியாத்தம்.



வேலூர் மாவட்டத்தில் ஆந்திர மாநில எல்லையை ஒட்டி அமைந்த இந்நகரம் முதலில் குடியேற்ற நல்லூர் என்ற பெயர் கொண்டு அழைக்கப்பட்டு வந்தது. காலப்போக்கில் குடியேற்றம் என்று அழைக்கப்பட்டு பேச்சு வழக்கில் குடியாத்தமாகி நிலைத்து நின்றுவிட்டது.

இந்நகரில் கர்நாடக மாநிலத்தில் இருந்து கன்னடர்கள் குடியேறி தீப்பெட்டி தொழிலகங்களை உருவாக்கி உள்ளார்கள்.





கன்னடர்களின் வருகைக்கு பிறகு நகரம் பெருமளவில் வளர்ந்து தீப்பெட்டி உற்பத்தியில் மாநிலத்தில் முக்கிய இடமாக மாறியுள்ளது. கன்னட மக்கள் பெருமளவில் குடியேறியதால் குடியேற்றம் என்று அழைக்கப்பட்டதாக கூறப்படுகிறது. குடியாத்தத்தில் கோபாலபுரம் பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

இத்திருக்கோயில் கிழக்கு பார்த்து அமைந்துள்ளது. மூலவராக ஸ்ரீகெங்கையம்மனும், மூலவரை சுற்றி ஸ்ரீ பிராமி, ஸ்ரீ தாட்சாயினி, ஸ்ரீவாராகி, ஸ்ரீ துர்கை சிலைகள் சிறு சன்னதிகளில் அழகுற எழுந்தருளுகின்றனர். கோயிலின் முன் வேப்பமரமும், பின்புறம் அரசமரமும் அமைந்துள்ளதால் சக்தியும் சிவனும் கோயில் கொண்டு அருள்பாலிப்பதாக உள்ளது. வெள்ளி கவசம் அணிந்து சிம்ம பீடத்தின் மீது அம்மன் சாந்த சொரூபமாக காட்சியளிக்கின்றார்.

மூலவர் மண்டபத்தை அடுத்து அம்மன் சிரசு மண்டபம் பிரம்மாண்டமாக காட்சியளிக்கிறது. சித்திரை மாதத்தின் கடைசி நாளில் தேர்த்திருவிழாவும், வைகாசி முதல் தேதி அம்மன் சிரசு ஊர்வலமும் தொடர்ந்து ஆண்டுதோறும் நடத்தப்படுகிறது. இத்திருவிழா 12 நாட்கள் நடைபெறுகிறது. காப்பு கட்டும் திருவிழா அன்று அனைத்து கிராம ஊழியர்களையும் கௌரவித்து கோயில் நிர்வாகம் முதல் மரியாதை அளித்தும், திருவிழா முடியும் வரை அவர்கள் தாங்களே கோயிலைத் தத்தெடுத்து பணியினை மேற்கொள்வது சிறப்பான ஒன்றாகும்.



## அம்மன் சிரசு திருவிழா வரலாறு

விதர்ப்ப தேசத்தை ஆண்ட மன்னன் இரைவத மகாராஜன் குழந்தை பாக்கியம் இல்லாததால் கடும் தவம் மேற்கொண்டு பிரம்மதேவனை பூஜிக்கின்றார். பிரம்மதேவன் கொடுத்த வரப்படி ரேணுகாதேவியை மகளாக பெறுகின்றார்.



வளர்ந்து அழகு தெய்வமாக காட்சி தரும் ரேணுகாதேவி (கெங்கையம்மன்) ஜமத்கனி என்ற முனிவருக்கு திருமணம் செய்து தருகின்றனர். இவர்களுக்கு விஷ்ணுவின் அம்சமான பரசுராமன் உட்பட நான்கு குழந்தைகள் பிறக்கின்றன.

நாள்தோறும் ரேணுகாதேவி தாமரை குளத்தில் நீராடிவிட்டு தன் கற்பு நெறியால் மண்ணில் குடம் செய்து தண்ணீர் எடுத்து வருவது வழக்கம். அப்படி ஒருநாள் மண் குடத்தில் தண்ணீர் எடுக்க தாமரை குளத்தை நோக்கிய வேளையில் தேவர் குலத்தை சேர்ந்த கந்தர்வர் சாயலை கண்டு வியந்து நிற்கின்றார்.

வியந்து நின்ற மாத்திரமே கற்பு நெறி களங்கப்பட்டு மண்குடம் கரைந்து மீண்டும் மண்ணாகி போகிறது.

கடும் தவத்தில் இறைவனை நெஞ்சில் நிறுத்தி வணங்கி வழிப்பட்டு வந்த ஜமத்கனி முனிவர் ஞானத்தால் ரேணுகாதேவி கந்தர்வன் அழகில் மயங்கி கற்பு நெறி பிறழ்ந்ததை உணர்ந்து தன் மகன்கள் நால்வரை அழைத்து உன் தாயின் தலையை வெட்டி விடுங்கள் என கட்டளையிடுகின்றார்.

தாயின் பாசம் மகன்களில் பரசுராமனை தவிர மற்ற மூவரை தள்ளாட வைக்கின்றது. தாயின் தலையை வெட்ட மறுத்து மூவரும் தந்தையின் கட்டளையை உதறித் தள்ளுகின்றனர். பரசுராமன் தந்தையின் கட்டளையை தலைமேல் தாங்கி வெள்ளமென உடைந்து பெருகும் கண்ணீருடன் எறிந்துவிட்டு ரேணுகாதேவி தலையை வெட்டி வருகின்றான்.

மகன் தன்னை வெட்ட வரும் தகவல் அறிந்து உயிரை காத்து கொள்ளும் பொருட்டு ஓடுகின்றாள். ஓடிவரும் வழியில் பறை சாற்றுபவர் வீட்டில் தஞ்சம் புகுகின்றாள். அங்கும் பரசுராமன் பாசத்தை தூக்கிக்கொண்டு எறிந்துவிட்டு ஆக்ரோஷமாக வருவதை கண்டு அங்கிருந்து சென்று சலவை தொழிலாளி வீட்டில் அடைகலமாகின்றாள்.

தந்தை கட்டளையை நிறைவேற்றும் ஆவேசத்துடன் மகன் வருவதை கண்டு ஓடும் ரேணுகாதேவி உடல் எங்கும் கொப்புளங்கள் பூக்க மீனவர் வீட்டில் கண்ணீரும் கம்பலையுமாக மறைந்து கிடக்க அங்கு வந்த பரசுராமன் தாயின் தலையை வெட்டுகின்றான்.



மகனால் வெட்டப்பட்டு உடல் வேறு தலை வேறாக விழ உயிர் துறக்கின்றாள். தாயின் தலையை வெட்டிய கையோடு ஆறாக பெருகும் கண்ணீருடன் தந்தை முன் நின்ற பரசுராமனிடம் ஜமத்கனி முனிவர் “தந்தை கட்டளையை நிறைவேற்றிய நீ என்ன வரம் வேண்டுமானாலும் கேள்” என்கின்றார்.

மீண்டும் தாயை உயிர்ப்பிக்க செய்யும் வரத்தை பரசுராமன் தந்தையிடம் கேட்க ஜமத்கனி முனிவர் கொடுத்த வாக்குபடி வரம் தர, தந்தை தந்த மந்திர நீரை எடுத்து கொண்டு தாயை வெட்டி வீழ்த்திய இடத்தில் வந்து நிற்கின்றார்.

தாயை மற்றொரு உடலுடன் தவறுதலாக பொருத்தி மந்திர நீரை தெளித்து உயிர் பிழைக்க வைக்கிறான். ஆனந்த கண்ணீருடன் உயிர் பெற்ற தாயை வணங்கி நிற்கின்றான் பரசுராமன்.

கற்புநெறி, தந்தை சொல் மந்திரம் ஆகியவற்றை அழுத்தி போதிக்கும் இப்புராணப்படி இக்கோயில் வைகாசி திருவிழா நடத்தப்படுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்குட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04171 – 225597

மின்னஞ்சல் : eoellaiamman@gmail.com





# 41. அருள்மிகு படவேட்டு எல்லையம்மன் திருக்கோயில், குடியாத்தம்.



இத்திருக்கோயில், குடியாத்தம் பேருந்து நிலையத்திலிருந்து அரை கிலோ மீட்டர் தூரமும், ரயில் நிறுத்தத்தில் இருந்து 5 கி.மீ. தொலைவிலும் புதுப்பேட்டை என்ற பகுதியில் அமைந்துள்ளது.

அருள்மிகு படவேட்டு எல்லையம்மன் சன்னதிக்கு இடப்புறம் அருள்மிகு விநாயகர், துர்க்கையம்மன், ஐயப்பன் சன்னதிகள், வலதுப்புறம் அருள்மிகு முருகர், நவக்கிரக சன்னதிகள் உள்ளன.



இத்திருத்தலத்தில் காலை, மாலை இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றது. ஆடிப்பெருவிழா 15 நாட்கள் நடைபெறுகிறது. திருமணம் மற்றும் குழந்தை வரம் வேண்டுதல் செய்யும் பிராத்தனைத்தலமாகும்.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04171 – 2226644

மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com







# 42. அருள்மிகு மகாதேவசுவாமி திருக்கோயில், காங்குப்பம், மகாதேவமலை, காட்பாடி வட்டம்



இத்திருக்கோயில் வேலூர் பழைய பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவிலும், இரயில் நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவிலும் காட்பாடி வட்டம், காங்குப்பம் எனும் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

இத்திருத்தலம் பல்வேறு சிறப்புகளை உடையதும் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட திருத்தலம் எனப்படுகிறது. சிவபெருமான் அரூப வடிவில் பாறையை பிளந்து சுயம்பு லிங்கமாய் பக்தர்களுக்கு காட்சியளிக்கிறார். சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் தேவக்கோட்டையில் வாழ்ந்து வணிகம் செய்து வந்த



நாட்டுக்கோட்டை செட்டியார் வம்சத்தை சார்ந்த சங்கரன் எனும் வணிகர் தீராத வயிற்று வலியால் அவதியுற்றார். நாடொறும் சிவபெருமானையே பூஜித்து வரும் அவ்வணிகள் தன் வயிற்று வலி நீங்க அருளுமாறு சிவபெருமானை வழிபடும்பொழுது வணிகனின் கனவில் சிவபெருமான் தோன்றி மஹாதேவமலையில் தாம் குடிக்கொண்டிருப்பதாகவும் அங்கு தமக்கு திருத்தலம் எழுப்புமாறு அருளினார். மகாதேவமலை, அறியாத வணிகர் பல இடங்களுக்கு சென்று திரிந்து இறுதியில் அம்மலையை அடைந்தார், மலையை அடைந்த வணிகன் இவ்விடத்தில் எங்கு திருத்தலம் அமைப்பது என்று திகைக்கும் பொழுது அவர் சிந்தனையில் சிவபெருமான் தோன்றி இம்மலைலையின்கண் ஒரிடத்தில் நாடொறும் காமதேனு பாலை சொரிந்து வருகின்றது அவ்விடத்தில் யாம் உள்ளோம் என்றார். வணிகர் அவ்விடத்தை சுற்றி திருத்தலம் அமைத்து அருள்மிகு விநாயகர் சந்நிதி , அருள்மிகு முருகப்பெருமான் சந்நிதி, அருள்மிகு காமாட்சியம்மன் சந்நிதி ஆகியவற்றை அம்பாள் அமைத்து கும்பாபிசேகம் செய்தார்.

சிவபெருமான் இட்ட கட்டளையால் இம்மலையின்கண் வந்தடைந்த வணிகர் என்னும் மஹா ஆனந்த சித்தர் சுவாமிகள் இத்திருத்தலத்திற்கு வருகைபுரியும் பக்தர்களைக் காத்தும், அருளாசி வழங்கியும், அவர்களின் குறைகள் நோய்ப்பிணிகளை நீக்கியும், அவர்களுக்கு இகபர இன்பங்களை அளித்து வருவதுடன் பக்தர்கள் மூலமூர்த்தியை எளிதாக வழிபடவேண்டி 16 கால்மண்டபத்தில் இருந்து திருத்தலம் வரை திருப்படிகள் அமைத்தும், 16 கால் மண்டபத்தினை திருப்பணி வேலைகளை செய்தும், மலையை குடைந்து தியான மண்டபத்தை மிகப்பிரம்மாண்ட முறையில் அமைத்து சித்தர்களை நினைவுகூறும்

வகையில் பதினென் சித்தர்களை கற்பாறையிலே வடித்த பெரு மஹாசித்தர் எனும் பெருமைக்குரியவர் மஹா ஆனந்த சித்தர் ஆவார்.

இம்மலையைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும் மக்கள் தங்கள் குழந்தைகளுக்கு வரன், வது பார்க்கும்பொழுது மகாதேவர் மலைக்கு சென்று மகாதேவரை வேண்டி வணங்கி, அம்மலையின்கண் நாடொறும் வரும் பக்தர்களுக்கு அன்னமிட்டு வணங்கி வரப்படுகிறது இச்செயல் இன்றும் அப்பகுதியில் நடந்தேறி வருகிறது.

இத்திருக்கோயிலில் ஆகம முறைப்படி பூஜை நடைபெறுகிறது, இத்திருத்தலத்தில் கால சந்தி, சாயரட்சை எனும் கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன. திருக்கோயிலின் மிக விசேச தினங்கள் சங்கடஹர சதுர்த்தி, ஆடிக்கிருத்திகை, கார்த்திகை தீபம், பிரதோஷம் , வியாழன் தோறும் குருபூஜை , சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் பூஜைகள், நித்தமும் இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் தரிசன நேரம்**

காலை 6 மணி முதல் 10 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04172 – 252295
மின்னஞ்சல் : vallimalaimurugar7@gmail.com



# 43. அருள்மிகு பத்மாவதி தாயார் சமேத வெங்கடேச பெருமாள் திருக்கோயில், மீனூர்மலை.



குடியாத்தம் ரயில் நிலையத்திலிருந்து 11 கி.மீ. தொலைவிலும், குடியாத்தம் பேருந்து நிலையத்திலிருந்து 6 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. மீனூர் மலை இத்திருக்கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு பெருமாள் வேண்டியன வேண்டியவாறு வரம் அளித்து அருள்பாலித்து வருகிறார்.

அருள்மிகு பத்மாவதி தாயார் உடனுறை அருள்மிகு வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில் கொண்டயன்ய மகா நதிக்கரையில் மலை மீது அமைந்துள்ளது. இத்திருக்கோயிலுக்கு




செல்ல 172 படிகள் உள்ளது. இத்திருக்கோயில் சன்னதி மேற்கு முகம் நோக்கி அமைந்துள்ளது சிறப்பாகும்.

பிரதி ஆண்டு தோறும் ஆவணி 15, 16, 17 ஆகிய மூன்று நாட்கள் மூலவர் பெருமாள் மீது உச்சி முதல் உள்ளங்கால் வரை சூரிய ஒளி படுவது இத்திருக்கோயிலின் தனிச் சிறப்பாகும். மேலும், புரட்டாசி மாதம் 6 வாரங்களும் சனி வாரப்பெருவிழா மிக சிறப்பாக நடைபெறுகிறது. இத்திருவிழாவில் ஏராளமான பக்தர்கள் கலந்து கொள்வர்.

தவிர, பிரதி சனிக்கிழமை படிவிழா நடைபெறும். ஸ்ரீராமநவமி அன்றும் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு பெருமாள் தரிசனம் செய்து பெருமாளின் அருள்பெற்று செல்வார்கள்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04171 – 222644
மின்னஞ்சல் : eoellaiamman@gmail.com



# 44. அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில், ஆம்பூர்.




வேலூர் மாவட்டம், ஆம்பூரின் மையப்பகுதியில் மேல் கிருஷ்ணபுரம் என்னும் பகுதியில் கிழக்கு நோக்கியவாறு இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் சற்று பள்ளமான இடத்தில் அமைந்துள்ளதால், 7 படிகள் இறங்கி உட்செல்லல் வேண்டும். சுயம்புமூர்த்தி, 12ம் நூற்றாண்டைச் சார்ந்தது. கால சர்ப்பதோஷம் நீக்கும் சிறப்புப்பெற்ற தலமாகும்.

ஆம்பூர் பஸ்நிலையத்திலிருந்து அரை கிலோ மீட்டர் தூரமும், ஆம்பூர் இரயில் நிலையத்திலிருந்து அரை கிலோ மீட்டர் தூரமும் கொண்டது.





பசு ஒன்று புற்று ஒன்றில் பால்சொரிவதை கண்டு அகழ்ந்து பார்த்தபோது சிவலிங்கம் காணப்பட்டது. பாம்புப்புற்றில் இப்பெருமானை நாகங்கள் காவல் காத்து வந்த நிலையில் இருந்ததால், இப்பெருமானுக்கு நாகநாதர் என்னும் பெயர் வழங்கி வருகிறது.

கிழக்கு கோபுரவாயிலின் வழியாக கோயிலினுள்ளே சென்று பிரகாரத்தினை வலம் வரும்போது கொடிமரம், பலிபிடம் அடுத்து நந்திதேவர்; தெற்கு பிரகாரத்தில் மார்கபந்தீஸ்வரர் சிவலிங்க வடிவில் உள்ளனர். மரகதவல்லி, விநாயகர், நந்திதேவர், ஆகியோரும் உள்ளனர்.

கிழக்கு பிரகாரத்தின் வடகோடியில் காலபைரவர், அடுத்துக் காளத்திநாதர் ஞானம்பிகை, அடுத்து விநாயகர், நால்வர், தண்டபாணி ஆகிய சன்னதிகள் மேற்கு நோக்கியவாறு அமைந்துள்ளன. இத்திருக்கோயிலின் தலமரம் வில்வமரமாகும். இது தெற்கு பிராகாரத்தில் உள்ளது. இதற்கு கிழக்கு மந்தாடி மரமும் உள்ளது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை **05.30** மணி முதல் நன்பகல் **12.00** மணி
மாலை **03.30** மணி முதல் இரவு **8.00** மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : **04174 – 248480**
மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 45. அருள்மிகு பெரிய ஆஞ்சநேயர் திருக்கோயில், ஆம்பூர்.




ஆம்பூர் பஸ்நிலையத்திலிருந்தும், இரயில் நிலையத்திலிருந்தும் ஒன்றரை கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

இராமாயண காலச்சிறப்பு பெற்றது. 11 அடி உயரமுள்ள திருமேனி காலின் அடியில் ஸ்ரீசனிஸ்வரை மிதித்து அவனது கர்வம் நீக்கிய இடம். ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் காலத்தில் கட்டப்பட்ட

இராஜகோபுரம், சனி தோஷ மீட்சித்தலம். தெற்கு வாயில் உள்ளே மூலவர் கிழக்கு நோக்கி இருக்க தெற்கு புறம்பார்க்கும் பார்வை உள்ளது.

இத்திருக்கோயிலில் மூலவர் ஸ்ரீ ஆஞ்சநேய பெருமாள், 11 அடி உயரமுள்ளவர். நெல்லி மரம் தல விருட்சம் ஆக உள்ளது. பிராத்தனை தலம்.

திருவிழா சிறப்புகள் புரட்டாசி சனிக்கிழமைகள்—5ம், ஸ்ரீராமநவமி, அனுமன் ஜெயந்தி, சித்திரை பௌர்ணமி ஆகிய நாட்கள் சிறப்பு தினங்களாகக் கொண்டாடப்படுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 46. அருள்மிகு காளியம்மன் திருக்கோயில், ஆம்பூர்.



ஆம்பூர் பேருந்து நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், ஆம்பூர் ரயில் நிலையத்திலிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலும் எஸ்.கே.ரோடு என்ற சாலையில் அமைந்துள்ளது.

இத்திருத்தலத்தில் மூலவர் பெயர் அன்னை காளிகாம்பாள், இறைவன் பெயர் சாமுண்டீஸ்வரர், லிங்க வடிவிலும், இறைவி அமர்ந்த நிலையிலும் உள்ளனர். சுற்றுப்பிரகாரத்தில் விநாயகர், முருகன், விஷ்ணு, பிரம்மா, தட்சிணாமூர்த்தி, சண்டிகேஸ்வரர், துர்கை, சாமுண்டி, லக்ஷ்மி, காயத்திரி, விஸ்கர்மா ஆகியோர்




உள்ளனர். எதிரில் பலிபீடம் நந்தி மற்றும் சிம்மம் உள்ளது. கருவறையிலுள்ள இறைவனின் பெயர் சாமுண்டீஸ்வரர் ஆகும்.

இத்திருக்கோயிலில் காலசந்தி, சாயரட்சை பூஜை நடைபெறுகிறது பிரதி வெள்ளி, செவ்வாய், இராகு கால பூஜை மற்றும் பௌர்ணமி, அமாவாசை போன்ற மாத பூஜைகளும் நடைபெறுகின்றன. வருடப்பிறப்பு, விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, ஆடிவெள்ளி, அன்னாபிஷேகம், தீபம், மார்கழி, ஆருத்ரா, தை, வெள்ளி, மாசி மகம் ஆகிய உற்சவங்கள் நடைபெறுகிறது.

குழந்தை வரம், திருமணத்தடை நீக்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி செய்தல், கெடுவினை தீங்கு நீக்கிக் காத்தல் , வியாபார அபிவிருத்தி, அம்மைக்கு பிராத்தனை போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக உள்ளன.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி வரை

மாலை 7 மணி முதல் 8 மணி வரை

விஷேச நாட்களில் பூஜை நேரம் மாறுபடும்.

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 47. அருள்மிகு புத்துக்கோயில் (எ) புத்து மாரியம்மன் திருக்கோயில், வாணியம்பாடி



இத்திருக்கோயில், வாணியம்பாடி வட்டம், பெத்தக் கல்லுப்பள்ளி கிராமத்தில் அமைந்துள்ளது. வாணியம்பாடி ரெயில் நிலையத்திலிருந்து சிறிது தொலைவிலும், பஸ் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது. சென்னை – பெங்களூரு தேசிய நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது.








இத்தலத்தின் இறைவியின் திருக்கோலம் புற்று சுயம்பு, கருவறை அம்மன் அமர்ந்த கோலத்தில் அருளுகிறாள். இருகால பூஜைகள் நடைபெறுகிறது. அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில் விசேஷ பூஜைகளும், நவராத்திரி, கார்த்திகை தீபம், மார்கழி மாத பூஜை போன்ற பருவ பூஜைகளும், ஜனவரி, சித்திரை, தை மாதம் முதல் நாள் வருட பூஜைகளும் நடைபெறுகிறது.

குழந்தை வரம், திருமணத்தடை நீங்குதல், காள சர்ப்பதோஷம் நிவர்த்தி, கெடுதல் நீக்கி, தீங்கிலிருந்து காத்தல் போன்றவை பக்தர்களின் பிராத்தனைகளாக உள்ளன.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 7 மணி
மாலை 7 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480
மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 48. அருள்மிகு சாமுண்டீஸ்வரியம்மன் திருக்கோயில், நாட்றாம்பள்ளி.



இத்திருத்தலம் சென்னை – பெங்களூர் நெடுஞ்சாலையில் வாணியம்பாடி ரயில் நிலையத்திலிருந்து 15 கி.மீ. தொலைவிலும், பஸ் நிலையத்திலிருந்து 14 கி.மீ. தொலைவிலும், திருப்பத்தூர் வட்டத்தில் உள்ள நாட்றம்பள்ளி என்ற ஊரில் அமைந்துள்ளது.





நாட்றம்பள்ளியில் சரஸ்வதி ஆற்றங்கரையின் மேல், 100 ஆண்டுகளுக்கு மேலாகக் குடிகொண்டு எழுந்தருளியிருக்கும் அருள்மிகு சாமுண்டீஸ்வரியம்மன் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம் ஆகும். இத்திருக்கோயிலுக்கு வருகை தரும் பக்தர்கள் தாலிபாக்கியம் வேண்டி வேண்டுதல் செய்து பின் தாலியை அம்மனுக்கு காணிக்கையாக செலுத்துவது வழக்கம். குழந்தையில்லாதவர்கள் குழந்தை வரம் வேண்டி பின் குழந்தை பிறந்த பின்னர் பலி சமையல் செய்து உற்றார் உறவினர்களுக்கு பரிமாறி வேண்டுதலை நிறைவேற்றி செல்கின்றனர்.





இத்திருக்கோயில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் பௌர்ணமி திருவிழா மிகவும் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. நவரத்திரி விழா 9 நாள் சிறப்பாக தசரா பண்டிகையாகவும், பிரதி மாதம் அமாவாசை, பௌர்ணமி பிரதிவாரம் வெள்ளிக் கிழமை சிறப்பு வழிபாட்டு தினங்களாக கொண்டாடப்படுகிறது.

தாலி பாக்கியம் மற்றும் குழந்தை வரம் வேண்டுவோர் இத்திருக்கோயிலுக்கு வந்து அம்மன் அருள் பெற்று செல்கின்றனர்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com





## 49. அருள்மிகு கஜேந்திர வரதராஜ பெருமாள் திருக்கோயில், திருப்பத்தூர்.

திருப்பத்தூர் பஸ் நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும், அருள்மிகு கோட்டை பிரம்மேஸ்வரர் திருக்கோயிலிருந்து 100 மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது.

கஜேந்திரனுக்கு மோட்சம் கொடுத்து காட்சியளித்ததனால் ‘‘கஜேந்திர வரதன்’’ என்று போற்றப்படுகிறது. பிருகு, மார்கண்டேயர்





ரிஷிகளுக்கு பிரத்தியட்சமாக காட்சி கொடுத்ததால் கஜேந்திர வரதராஜப்பெருமாள் என போற்றப்படுகிறது. ராஜராஜசோழர் காலத்தில் இத்திருக்கோயில் கட்டப்பட்டதாக கூறப்படுகிறது.

இத்திருக்கோயின் தாயார் பெருந்தேவித் தாயார் ஆகும். இராமானுஜர் உற்சவம், பிரம்மோற்சவம், வசந்த உற்சவம், ஆடிப்பூரம், திருப்பாவாடை உற்சவம், ஸ்ரீஜெயந்தி உற்சவம், பவித்ரோச்சவம், வைகுண்ட ஏகாதசி, கூடாரவல்லி, திருக்கல்யாணம், திருமலையில் ஒருநாள் வைபவம் ஆகியவை சிறப்பாக நடைபெறும் திருநாட்கள் ஆகும்.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com

# 50. அருள்மிகு கோட்டை பிரமேஸ்வரர் திருக்கோயில், திருப்பத்தூர்.

இத்திருக்கோயில் திருப்பத்தூர் பஸ் நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும், ரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. கி.பி.4ம் நூற்றாண்டில் வாழ்ந்த கோச்செங்கணான்



என்ற சோழ அரசனால் செங்கற்களால் கட்டப்பட்டு, உத்தமசோழன் என்ற பிற்கால சோழனால் பராமரிக்கப்பட்டு, இராஜராஜ சோழனால் கி.பி.10ஆம் நூற்றாண்டில் கருங்கற் கட்டிடமாக மாற்றும் பணி துவங்கப்பட்டு மகன் இராஜேந்திர சோழனால் முழுவதும் கருங்கல் கட்டிடமாக பூர்த்தி செய்யப்பட்டு அவன் அன்னையின் நினைவாக கட்டப்பட்டது எனப்படுகிறது. கி.பி.15ஆம் நூற்றாண்டு வரை கோசலர்கள் மற்றும் விஜய நகர அரசர்களால் பராமரிக்கப்பட்டு வரப்பட்டுள்ளது. இத்திருத்தலத்தில் காலபைரவர் நாகவாகனத்தில் அமைய பெற்றுள்ளது மிகவும் சிறப்புடையது.

அருள்மிகு கோட்டை திரிபுரசுந்தரி சமேத பிரமேஸ்வரர் திருக்கோயில் புராதன கால பழமையுடையது. பிரளயகாலத்தில் தலவிருட்சமான புன்னைமரத்தடியில் சுயம்பு லிங்கமாக எழுந்தருளிய ஈஸ்வரனை படைப்புக்கடவுளான நான்முகன் வந்து வழிபட்டதால் அவர் பெயரிலேயே தலநாயகன் பிரமேஸ்வரன் என்றும் இத்திருத்தலம் பிரம்மபுரம் என்றும் வழங்கப்பட்டது. நான்முகனின் படைப்பு தொழில் இங்குதான் துவங்கியதாகவும் நான் முகனின் துணைவியான அன்னை கலைவாணியின் ஊடலைத் தீர்த்து இருவரையும் ஈஸ்வரனே ஒன்று சேர்த்து வைத்ததாகவும் புராணம் கூறுகிறது. நான்முகனும் அன்னை கலைவாணியும் வழிபட்ட சிறப்புடையது இத்திருத்தலம் ஆதிசங்கரரால் நிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீசக்கரம் மூன்று இதில் ஒன்று





காஞ்சியிலும் மற்றொன்று காசியிலும், மற்றொன்று இத்திருத்தலத்திலும் உள்ளது. பைரவர்க்கு தேய்பிறையில் வரும் அஷ்டமி அன்று அதே நாள் ஹோரையில் பூஜை செய்வது சிறப்பாகக் கருதப்படுகிறது.

அருள்மிகு கோட்டை பிரம்மேஸ்வரர் லிங்கரூபமாகவும், அருள்மிகு திரிபுரசுந்தரியம்மன் மூலவராகவும், அம்மன் தீர்த்தம், தல விருட்சமாக புன்னை மரம் அமைந்துள்ளது. சிவாகம முறைப்படி பூஜை நடைபெறுகிறது. மகாசிவராத்திரி, பிரம்மோற்சவம், சித்ரா பௌர்ணமி, ஆருத்ரா உற்சவம், கார்த்திகை தீபம், தனுர்மாத உற்சவம். இத்திருக்கோயில், திருப்பத்தூர் நகரின் கிழக்கு திசையில் அமைந்துள்ளது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 6 மணி முதல் 10 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 51. அருள்மிகு சுந்தர வீராஞ்சநேயர் திருக்கோயில், திருப்பத்தூர்.



திருப்பத்தூர் பஸ் நிறுத்தத்திலிருந்து அரை கி.மீ. தூரமும், திருப்பத்தூர் இரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

திருப்பத்தூர் நகரின் மையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. சுமார் 800 ஆண்டுகளுக்கு முன்னர் செல்லும் வழியில்அமைந்துள்ள தாழைமடு என்னும் ஆற்றில் மீனவர்கள் மீன்பிடிக்க சென்றபோது விரித்த வலையில் ஒருமீட்டர் உயரமுள்ள கற்சிலை கிடைத்தது எனவும், அச்சிலை, சுந்தரவீர ஆஞ்சநேயர் எனவும், இதற்கு கோயில் அமைத்து வழிபட்டு வருகின்றனர்.






இத்திருக்கோயில் முன்பு சுமார் 100 அடி தூரத்தில் மேக்கிரி பாய் என்பவரின் வீடு அமைந்துள்ளது. அவருக்கு ஒருநாள் கனவில் ஆஞ்சநேயர் தோன்றி எனக்கு தீபக்கம்பம் அமைக்க நீர் இடம் தந்து தீபக்கம்பம் அமைத்து வழிபடவேண்டும் என்று கூற, அதே போல் அவரும் தீபக்கம்பம் அமைத்து ஒவ்வொரு வருடமும் விஷ்ணு தீபத்திற்காக அந்த பிரகாரத்திற்கு வெள்ளை அடித்து வழிபட்டு வருகின்றனர்.

அருள்மிகு சுந்தர வீர ஆஞ்சநேயர் உற்சவர், சன்னதி ராமர், சீதை இலட்சுமணன், ஆஞ்சநேயர், ஆகியோருக்கு பாஞ்சராத்திர ஆகம முறைப்படி பூஜை நடைபெறுகிறது.

பிரதி வருடம் விஷ்ணுதீபம், அனுமன்ஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி, மற்றும் ஸ்ரீராம நவமி, உற்சவங்கள் சிறப்பாக நடைபெறுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480
மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com



# 52. அருள்மிகு மண்குன்றுமலை, சென்னகேசவப்பெருமாள் திருக்கோயில், பேராம்பட்டு.



திருப்பத்தூர் வட்டம், பேராம்பட்டு கிராமத்தில் திருப்பத்தூரிலிருந்து திருவண்ணாமலை செல்லும் சாலையில் 6 கி.மீ. தொலைவில் சாலைக்கு கிழக்குபுறம் ஒரு குன்றின்மேல் கிழக்கு நோக்கியவாறு சன்னதி அமைந்துள்ளது. பேராம்பட்டு பஸ்நிறுத்தத்திலிருந்து 2 கி.மீ. தூரமும், இத்திருக்கோயில் அமைந்துள்ளது.





சுமார் 300 ஆண்டுகள் பழமைவாய்ந்த திருக்கோயில் மண்குன்றுமலை ஆகும். கற்கள் இல்லாமல் அமைந்துள்ளதால், மண்குன்றுமலை எனப்போற்றப்படுகின்றது. சித்தர்கள் தங்கி பெருமாளை வழிபட்டதாக வரலாறு. பேராம்பட்டு கிராமத்திற்கு மேற்குபுறம் தனியாக குன்று வடிவில் அமைந்துள்ளதால் மண்குன்றுமலை எனவும் போற்றப்படுகிறது.

அருள்மிகு சென்னகேசவப்பெருமாள் கோயிலின் அடிவாரம் கோவிந்தராஜபெருமாள், விநாயகர் மற்றும் பஞ்சமுக ஆஞ்சநேயர் சன்னதி அமைந்துள்ளது. அடிவாரத்திலிருந்து மண்குன்று மலைக்கு செல்லும் வழியில் சுமார் 1 கி.மீ தூரத்தில் சிறிய பாறையில் அமைந்துள்ள சுனை ஒன்று உள்ளது. சித்தர்கள் இந்த





சுனையிலிருந்து நீர்எடுத்துசென்று சுவாமிக்கு அபிஷேகம் செய்ததாக வரலாறு உண்டு.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை

மாலை 5 மணி முதல் 8 மணி வரை

திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.

திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480

மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com





# 53. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், பசலிக்குட்டை.



இத்திருக்கோயில், திருப்பத்தூர் வட்டம், பசலிக்குட்டையில் அமைந்துள்ளது. திருப்பத்தூரிலிருந்து திருவண்ணாமலை செல்லும் சாலையில் 6 கி.மீ. தொலைவில் சாலைக்கு கிழக்குபுறம் ஒரு குன்றின்மேல் கிழக்கு நோக்கியவாறு சன்னதி அமைந்துள்ளது. திருப்பத்தூர் பஸ்நிலையத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது.

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் "சேல்புறல் பசலிக்குட்டை" கிராமத்தில் சிறுகுன்றின்மேல் அமைந்துள்ள இத்திருக்கோயில் உட்புறம் ஒரு சுனையும் வெளிப்புறத்தில் 3 சுனையுடனும் அமைந்துள்ளது. இச்சுனையில் நீராடினால் கெட்டக்காற்று, சித்தம் தவறுதல் போன்றவை நீங்கி சுகம் பெறுகின்றனர். வேண்டிய வரமும் பெறுகின்றனர்.





இத்திருக்கோயில் ஆடி 18ம் பெருவிழா மிக சிறப்பாக கொண்டாடப் படுகிறது. சுற்றுப்புறம் உள்ள சுமார் 60 கிராமங்களில் இருந்தும் ஆயிரக் கணக்கான பக்தர்கள் தரிசனம் செய்கின்றனர்.

அருள்மிகு சுப்பிரமணியசுவாமி, வள்ளி தெய்வானை, விநாயகர் சன்னதி, தண்டபாணி சன்னதி அமைந்துள்ளது.

இங்கு அமைந்துள்ள சுனையில் நீராடி சுவாமி தரிசனம் செய்து, வேண்டிய வரம் பெறுகின்றனர். திருமண தடை நீங்கி நல்லமுறையில் திருமணம் நடைபெறுகிறது.

தலவிருட்சம் வேம்பு, காமிக ஆகம முறைப்படி பூஜை நடைபெறுகிறது.

ஆடி 18ம் பெருவிழா மிக சிறப்பாகவும், ஆடிக்கிருத்திகை கந்த சஷ்டி, விழாவும் கொண்டாடப்படுகிறது.

## திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480
மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com





# 54. அருள்மிகு வெற்றிவேல் முருகன் திருக்கோயில், ஜலகாம்பாறை.



திருப்பத்தூர் வட்டம், திருப்பத்தூர் பஸ்நிலையத்திலிருந்து 15 கி.மீ. தூரமும், திருப்பத்தூர் இரயில் நிலையத்திலிருந்து 16 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளது ஜலகம்காறை.

கடல் மட்டத்திலிருந்து சுமார் 3000 அடி உயரத்தில் உள்ளது. 01.09.1997 அன்று ஆயிரக்கணக்கானோர் தரிசிக்க வெற்றி வேல் நிலை நாட்டப்பட்டது. அன்று தொட்டு இன்று வரை நாள் தோறும் வழிபாடு, திங்கள் தோறும் திருக்கார்த்திகையன்று விழாக்கோலம், ஆண்டுதோறும் ஆடித்திங்கள் கார்த்திகையன்று பெருவிழா, முருக பக்தர்கள் வழிபடுகின்றனர். அருளாசி பெறுகின்றனர்.

இத்திருக்கோயில் பகுதிகளில் சித்தர்கள் உறைவதாகக் கூறப்படுகிறது. குன்று தோறும் உள்ள குமரனை இம்மலை





முகட்டிலேயே கண்டனர். எண்ணத்திற்கு வடிவம் கொடுக்கப்பட்டது.

ஏலகிரி மலையின் தெற்கே, நீர் அருவியுடன் கூடிய இயற்கை எழில்மிகுந்த ஜலகாம்பாறையில் பல்லாண்டுகளுக்கு முன் திருப்பதி ஸ்ரீவெங்கடேச பெருமாளின் பாதம் பதிந்த இடத்தில், சித்தர்கள் வாழ்ந்த உறைவிடமாக இருக்கும், இந்த ஸ்தலம் பிற்காலத்தில் சிவலிங்க திருமேனி அமைப்பில் முருகன் கோவிலுடன் மிகச்சிறந்த ஞான யோகஸ்தலமாக விளங்கும் என்றும் ஞான யோகிகளாலும், அருள் வாக்கினாலும் கூறினர். இப்புனித தீர்த்தத்திற்கு திருமால் முருகன் தீர்த்தம் என்று பெயர். ஸ்தல விருட்சமாக அத்தி மரம் போற்றப்படுகிறது.

### திருக்கோயில் தரிசன நேரம்

காலை 7 மணி முதல் 11 மணி வரை
மாலை 5 மணி முதல் 8 மணி வரை
திருவிழா நாட்களில் நேரம் மாறுதலுக்கு உட்பட்டது.
திருக்கோயில் தொலைபேசி எண் : 04174 – 248480
மின்னஞ்சல் : eonaganathaswamy@gmail.com

# 55. அருள்மிகு அஞ்சனாட்சி சமேத மணிகண்டீஸ்வர் திருக்கோயில், திருமாற்பேறு.



விருத்தக்ஷிரநதி என்னும் பழைய பாலாற்றின் வடக்குகரையில், வேலூரிலிருந்து காவேரிப்பாக்கம் செல்லும் நெடுஞ்சாலையில் மாவட்ட எல்லையான ஒச்சேரியிலிருந்து பிரிந்து செல்லும் சாலை வழியாக 10 கி.மீ. சென்று இத்தலத்தை அடையலாம். செங்கல்பட்டு – அரக்கோணம் இரயில் பாதையில் திருமால்பூர் இரயில் நிலையத்திற்கு தென்மேற்கே 4 கி.மீ. தூரத்திலும், காஞ்சிபுரத்திலிருந்து 12 கி.மீ. தூரத்திலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

தொண்டை நாட்டில் தேவாரம் பாடல்பெற்ற திருத்தலங்கள் 32 அவற்றுள் 11வது தலமாக அமைந்துள்ளது. திருமால்



சிவபெருமானை வழிபட்டு சுதர்சனம் என்னும் சக்கராயுதம் பெற்று பேறு பெற்ற திருத்தலம் அவ்வாறே ஊர் பெயரும் திருமாற்பேறு என்று பெயர் பெற்று விளங்குகிறது.

இத்திருக்கோயில் முதலாம் பராந்தக சோழனால் கட்டப்பட்டது. கிழக்கு நோக்கிய இத்திருக்கோயில், சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கியும், அம்பாள் சந்நிதி தெற்கு நோக்கியும் அமைந்துள்ளது. துவாரபாலகர்கள் பெரிய உருவில் காட்சி தருகின்றனர். கோயிலின் அருகில் நந்தவனமும், பசுமடமும் உள்ளது. சுவாமி சந்நிதியில் உட்பிரகாரத்தில் நந்தி கேசுவரர் நின்ற திருக்கோலத்தில் உள்ளார். இரண்டாம் பிரகாரத்து சந்நிதியில் திருமால் நின்ற திருக்கோலத்தில் கூப்பிய கரத்துடன் சிவப்பெருமானை வணங்கும் கோலத்தில் காட்சி தருகின்றார்.

சுவாமி தீண்டாத்திருமேனி உடையவர். குவளை சாத்தியே அபிஷேகம் நடைபெறுகிறது. விருத்தக்ஷிரநதி என்னும் பழைய பாலாறு இத்தலத்திற்கு அருகில் வடக்கு திசையில் உள்ளது. திருஞான சம்பந்தர் ‘திரையார் பாலியின் தென்கரைமாற்பேறு ’என இந்நதியை குறிப்பிடுகிறார்.

**புராண வரலாறு**

குபன் எனும் அரசன் பொருட்டாக திருமால் தசீசி முனிவரின்மீது தமது சக்கராயுதத்தை ஏவினார். அது அவரது வஜ்ர உடலை தாக்க முடியாமல் வாய்மடிந்தது. அதனால் திருமால் இத்தலத்தை அடைந்து அம்பிகை பூசித்த இளங்கத்தை ஆயிரம்



தாமரை மலர்களால் நாள்தோறும் அருச்சித்து சக்கராயுதம் அருள வேண்டினார்.

சிவபெருமாள் அவரது பக்தியை சோதிக்க வேண்டி ஒரு நாள் திருமால் கொணர்ந்த ஆயிரம் தாமரை மலர்களில் ஒன்றை மறைந்தருளினார். திருமால் முன்தோன்றி "தாமரை மலருக்காக உன் கண்ணை எடுத்து அருச்சித்தமையால் உனக்கு தாமரைபோலும் கண் கொடுத்தோம். இனி பதுமாக்ஷன் என பெயர் பெறுவாயாக" என்று அருள்செய்து நீ வேண்டிய சக்கரத்தையும் அருளினோம் என்று காட்சி நல்கினார்.

திருமால் இறைவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி என்போன்று ஆயிரம் திருநாமங்கள் கூறி மலர்தூவி வழிபடுபவர்களுக்கு எண்ணிய வரத்தை அருள வேண்டுமென வேண்டினார். சிவப்பெருமானும் அவ்வாறே வரம் அருளினார் என இவ்வரலாறு காஞ்சிபுரம் கூறுகிறது.

